13295







ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

Sri Bhasya dramidagama

# ஸ்ரீபாஷ்ய த்ராமிடாகமாத்ய

adyadashavadrandvailya

# தசகத்வந்த்வ ஐககண்ட்யம்

கிடைக்குமிடம் & பதிப்பாசிரியர்:—

Sri Krishna Swamy Iyengar

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி,

ஆசிரியர்:— "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶனம்"

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.

டிரஸ்டிகள்:—

1. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L., அட்வகேட்,
2. S. ராமய்யங்கார், B.Sc.B.L., அட்வகேட்.

விலை ரூ. 2. தபால் 75 பை.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

24—5—75.

Trichy

# முன்னுரை

விஶிஷ்டாத்3வைத ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதா3யம் உப4யவேதா3ந்த ஸம்ப்ரதா3யம என்று பெயர்பெற்று விளங்குகிறது. ஸ்ரீபா4ஷ்யத்தால் விவரிக்கப்பெற்ற ப்3ரஹ்ம ஸூத்ரங்களால விளக்கப்பெற்ற ஸம்ஸ்க்ருத வேதா3ந்தம் இதற்கு ஓர் கண். பூர்வாசார்யர்களுடைய பற்பல வ்யாக்2யானங்களால விளக்கப்பெற்ற தாய், மற்றையாழ்வார்களுடைய தி3வ்யப்ரப3ந்த4ங்களை அங்கோ3பாங்க3ங்களாகக் கொண்டதாய், ஸ்ரீ ஶட2கோபரெனும் நம்மாழ்வாரால நாலு வேத3ங்களின் ஸாரமாக அருளிச்செய்யப்பெற்ற திருவாய்மொழி முதலான நாலு தி3வ்யப்ரப3ந்த4ங்களுமாகிய த்3ராவிட3வேதா3ந்தம் இதற்கு மற்றொரு கண்ணாகும். இரண்டு கண்களாலே ஒரே பொருளைப் பார்ப்பதுபோலே, நாம் இவ்விரு வேதா3ந்த3ங்களைக கொண்டு ஶ்ரிய:பதியான ஒரே வஸ்துவைக்கண்டு, உப4யவேதா3ந்திகள் என்றும விஶிஷ்டாத்3வைதிகள் என்றும் பெயர்பெறுகிறோம். ஸம்ஸ்க்ருத வேதா3ந்தத்தை ப்3ரஹ்மஸூத்ரமுக2த்தாலே விவரித்தருளிய வேத3வ்யாஸரே, நமமாழ்வாராக அவதரித்து அதைத் தமிழிலே செவிக்கினிய செஞ்சொலலாகப் பாடினார் என்றும், இவ்விரண்டு நூல்களையும் யுக்திகளாலே ஒற்றுமைப்படுத்திக் காட்டுவதற்காக அவரே ஸ்ரீராமாநுஜராம் ஸ்ரீபா4ஷ்யகாரராய் அவதரித்தார் என்றும்,

> **"புரா ஸூத்ரைர் வ்யாஸ: ஶ்ருதிஶதஶிரோர்த்த2ம் க்3ரதி2தவாந்**
> **விவவ்ரே தம் ஶ்ராவ்யம் வகுளத4ரதாம் ஏத்ய ஸ புந: ।**
> **உப4ாவேதௌ க்3ரந்தௌ2 க4டயிதுமலம் யுக்திபி4ரஸௌ**
> **புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்3ரஹ்மமுகுர: ॥"**

என்னும் ஶ்லோகத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார்.

நாலுவேத3ஸாரமான நாலு ப்ரப3ந்த4ங்களில், நூறு பதிகங்கள்கொண்ட திருவாய்மொழி ப்ரதா4நமானது. அதின் ஸாரமாயிருக்கும் "உயர்வற" "வீடுமின்" என்னும் முதல் இரண்டு திருவாய்மொழிப் பதிகங்களும் மோக்ஷஶாஸ்த்ரத்தையே தன்னுள் அடக்கியுள்ளது. "தத்வபரமாயும், உபாஸநபரமாயுமிறே மோக்ஷ ஶாஸ்த்ரந்தானிருப்பது; அதில் தத்வபரமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லிற்று கீழில் (உயர்வற) திருவாய்மொழியிலே. உபாஸநபரமாகச் சொல்லவேண்டுமவற்றுக்கெல்லாம் ஸங்க்3ரஹமாயிருக்கிறது இத்திருவாய்மொழி" என்று "வீடுமின் முற்றவும்" ப்ரவேஶத் தொடக்கத்திலே நம்பிள்ளை அருளிச்செய்தார். இதே கருத்தை **"ஆதௌ3 ஶாரீரகார்த்த2க்ரமமிஹ விஶத3ம் விம்ஶதிர் வக்தி ஸாக்3ரா"** என்று ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகரும் தமது த்3ரமிடோ3பநிஷத் தாத்பர்ய ரத்நாவளியின் அவதாரிகையில் ஐந்தாம் ஶ்லோகத்தில் அருளிச்செய்தார்.

இவ்வண்ணமாக முதலிரண்டு திருவாய்மொழிகளில் சொல்லப்படும் அர்த்த2மே — ஸ்ரீ பா4ஷ்யத்தால் விளக்கப்பெற்ற ப்3ரஹ்மஸூத்ரங்களில் நான்கு

அத்₄யாயங்களிலுமுள்ள எல்லா அதி₄கரணங்களாலும் சொல்லப்படுகிறது என்பது ஸகல பூர்வாசார்ய ஸித்₃த₄ாந்தமாயிருந்தபோதிலும், இந்த உப₄ய வேத₃ாந்த ஐககண்ட்₂யத்தை ஓர் நூலிட்டுப் பூர்வாசார்யர்கள் விளக்கவில்லை. இக்குறை தீர — ஸ்ரீ காஞ்சீ வாதி₃கேஸரி ஜீயர் மட₂த்தை அலங்கரித்திருந்த ஓர் யதீஶ்வரர் இந்நூலை அருளியிருக்கிறார்.

இவர் உப₄யவேத₃ாந்தங்களையும் கரைகண்டவர் என்பதும், ஸ்ரீ காஞ்சியிலும், ஸ்ரீ பெரும்பூதூரிலும் வாதூ₄ல கோ₃த்ரத்தில் அவதரித்தவர்களான இரண்டு வேங்கடாசார்யர்களை ஆஶ்ரயித்தவர் என்றும் இவரது நூலை ஸேவிப்பவர்களுக்குத் தெளிவாக விளங்கும். ஒன்றான வாதி₃கேஸரி அழகிய மணவாளச் சீயர் பெரியவாச்சான் பிள்ளைக்கும், அவர் குமாரரான நாயனாராச்சான் பிள்ளைக்கும் சிஷ்யராயிருந்தவர். திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி உரையும், திருவிருத்தம் முதலான மற்றும் சில ப்ரப₃ந்த₄ங்களுக்கும் உரையுமருளியவர். தீ₃பப்ரகாஶ ஸஹித தத்வதீ₃பம், தத்வ நிரூபணம் முதலான பல நூல்களை உப₄யப₄ாஷைகளிலும் அருளியவர். இவராலோ, இவருடைய சிஷ்ய ப்ரஶிஷ்யர்களாலோ ஸ்ரீ காஞ்சியில் ஸ்த₂ாபிக்கப் பட்டிருக்கும் வாதி₃கேஸரி அழகிய மணவாளச் சீயர் மட₂ாதி₄பதியாக இந்த ஐககண்ட்₂ய க்₃ரந்த₂ கர்த்தா விளங்கியிருக்கவேண்டும்.

**ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியால் ஸ்த₂ாபிக்கப்பெற்ற க்₃ரந்த₂ ப்ரகாஶந ஸமிதியின் ஆதரவிலும், ஸ்ரீ வைஷ்ணவ ஸுத₃ர்ஶந ஸ்ரீஸூக்திமாலா ஸ்த₂ாபகராய், எந்தையாரான ஸ்ரீ உ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியால் நிறுவப்பெற்ற ஸ்ரீ ரா. ஸ்ரீ கி. ஸ்ரீநிவாஸய்யங்காரின் குடும்ப₃ த₄ர்ம சொத்துக்களின் ஆதரவிலும்** வெளியிடப்பெற்ற ப₄க₃வத் விஷயப் பதிப்பின் முதல் பா₄க₃த்தில் இந்நூலும் இணைக்கப்பெற்றது. மிகப்பெரிய அளவிலுள்ள அப்பதிப்பைப்பெற்று அநுப₄விக்க முடியாதவர்களும் அநுப₄விப்பதற்காக இந்நூல் தனியாகவும் வெளியிடப்பெற்று, ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியால் ஸ்த₂ாபிக்கப் பெற்ற உப₄யவேத₃ாந்த ஆசார்யபீட₂ம் - உப₄யவேத₃ாந்த ப்ரசார ஸபை₄களின் வார்ஷிகோத்ஸவ ஸமயத்தில் ராக்ஷஸ வருஷம் ஐப்பசி மாதத்தில் உப₄ய வேத₃ாந்த வித்₃வான்களுக்கு இலவசமாக அளிக்கப்படுகிறது. ஸ்வாமியின் இத்தகைய லோகோபகாரமான கார்யங்கள் மேன்மேலும் பெருகவேண்டும் என்று பல்லாண்டு பாடவேண்டியது ஆஸ்திகர்கள் அனைவர்க்கும் கடமையாகும்.

**ராக்ஷஸ-ஸ்ரீ**
**வைகாசி விசாகம்**
**24—5—75**

**இங்ஙனம்,**
**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
**பதிப்பாசிரியர்.**

ஸ்ரீ:-

## ஈட்டில் இரண்டாம் திருவாய்மொழியின் ப்ரவேஶத்திலே அருளிச்செய்த ப்ரத2மஸங்க3தி க்3ரந்த2த்திற்கு விவரணமாகிய

# ஸ்ரீபா4ஷ்ய த்3ரவிடா3கமாத்3யஶகத்வந்த்3வ ஐககண்ட்2யம்



1. ஶாரீரகத்3ரமிட3வேத3ஶிரஸ்ஸமுத்3த்4ருத ஸ்வாபா4விக ஸ்வகு3ணரத்நசயம் ரமேஶம் ।
ஹஸ்த்யத்3ரிமூர்த்4ந்யநிஶமாஶ்ரிதரக்ஷணைகதீ3க்ஷம் வ்ரஜாமி ஶரணம் ரமணம் யதீந்த்3ர: ॥

2. யோ வாஸ்ய த3ர்ஶநவரஸ்ய குலாதி4நாதோ2
யோ ப்3ரஹ்மணோऽபி பரதத்வமிதி ப்ரதீத: ।
யஸ்யாப4வந் நிக3மமௌளிவராஸ் ஸுவாசஸ்
ஸோऽயம் ஶட2ாரிரவதாந்மது4ரை: கடாக்ஷை: ॥

3. யதீந்த்3ரஸ் ஶட2ாரிம் ஸதா3 ஸேவமாந:
குத்3ருஷ்டீம்ஶ்ச பா3ஹ்யாந் முதா4 வாத3யுக்தாந் ।
கதா2மாத்ரஶேஷாந் விதா4யாத2 விப்ராந்
த்ரயீமார்க்க3 நிஷ்ட2ாந் ஜயத்யத்ர லோகே ॥

4. ஸ்ரீவத்ஸசிஹ்நதநுஜாக3மமௌளியோகி3 –
ஸ்ரீமத் கலிக்4ந வரயோகி3முகா2 மஹாந்த: ।
வ்யாஸார்யவேத3ஶிக2ார்ய மஹார்ய முக்2யா:
வேதா3ந்த யுக்3ம கு3ரவோ ஹ்ருதி3 ஸந்நித3த்4யு: ॥

5. ஸ்ரீமத்3யதீந்த்3ர வரயோகி3த3யா ஸுபாத்ர வாதூ4லவம்ஶ கலஶாம்பு3தி4பூர்ண சந்த்3ரௌ ।
காஞ்சீ யதீஶ ஜநிபூ4மி க்ருதாவதாரௌ ஸ்ரீவேங்கடாபி4த4கு3ரு ஶரணம் ஶ்ரயாம: ॥

6. ஸ்ரீபா4ஷ்ய த்3ரமிடா3க3மாத்3ய த3ஶகத்3வந்த்3வைகமத்யம் ஸுதீ4 –
க3ம்யம் ப்ராக்3கு3ருவர்ய ஸம்மதமித3ம் த்வம் க்3ரந்த2தோ த3ர்ஶய ।
இத்யேவம் யதிராஜ த3ர்ஶநரதை: ப்ருத்2வீஸுரை: ப்ரேரித:
காஞ்சீ ஸௌம்ய வராபி4தே4ாऽக்ருத முநி: ஸ்ரீவேங்கடார்யாத்ததீ4: ॥

7. ந வேதா3ர்த்த2ாந் வித்3மோ ந க2லு கவிதாம் வ்யாக்ருதிபத2ம்
ந தர்க்கேஷ்வப்4யாஸோ ந பரமதப4ங்கீ3பரிசய: ।
அதா2பி ஸ்ரீராமாவரஜ முநிவர்யோக்தி நிசய–
ப்ரகாமாப்4யாஸோ மே ப்ரகடயதி ஸர்வத்ர தி4ஷணாம் ॥

முதல் திருவாய்மொழியும், இரண்டாம் திருவாய்மொழியும் அத்4யாய சதுஷ்டயாத்மக ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ர ஸமாநார்த்த2கமாயிருக்கும்; ஶாரீரகார்த்த2ந்தான் ப்3ரஹ்மகாரணத்வமும், தத3பா3த்4யத்வமும், முமுக்ஷூபாஸ்யத்வமும், முக்த ப்ராப்யத்வமும். 8. "காரணத்வமபா3த்4யத்வமுபாயத்வமுபேயதா" என்னக் கடவதிறே. இவ்விரண்டு திருவாய்மொழியும் வேதா3ந்தஶாஸ்த்ர ஸமாநார்த்த2ம

என்னுமிடத்தை நம்பிள்ளை ஈட்டிலே * வீடுமின் முற்றின் ப்ரவேஶத்திலே, "தத்வபரமாயும் உபாஸநபரமாயுமிறே மோக்ஷஶாஸ்த்ரந்தானிருப்பது : அதில் தத்வபரமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லிற்று கீழில்திருவாய்மொழியிலே. உபாஸநபரமாகச் சொல்லவேண்டுமவற்றுக்கெல்லாம் ஸங்க்₃ரஹமாயிருக்கிறது இத்திருவாய்மொழி" என்று அருளிச்செய்தார் ; இத்தையுங்கொண்டு வேதா₃ந்தாசார்யரும் த்₃ரமிடோ₃பநிஷத் தாத்பர்யரத்நாவளியிலே **1. "ஆதௌ₃ ஶாரீரகார்த்த₂ க்ரமமிஹ விஶத₃ம் விம்ஶதிர் வக்தி ஸாக்₃ரா"** என்று அருளிச்செய்தார் ; இன்னமும் **2. "புரா ஸூத்ரைர் வ்யாஸஶ் ஶ்ருதிஶதஶிரோர்த்த₂ம் க்₃ரதி₂தவாந், விவவ்ரே தம் ஶ்ராவ்யம் வகுளத₄ரதாமேத்ய ஸ புந:। உப₄ாவேதௌ₃ க்₃ரந்தௌ₂ க₄டயிதுமலம் யுக்திபி₄ரஸௌ, புநர்ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்₃ரஹ்ம முகுர: ॥"** என்று, ஸாமாந்யேந ஶாரீரகத்துக்கும் திருவாய்மொழிக்கும் உண்டான ஐகமத்யத்தை ஆச்சான்பிள்ளையும் அருளிச்செய்தார் ; ஆகையால் இரண்டு திருவாய்மொழியும் பூர்வோத்தர த்₃விகாத்மகமான ஶாரீரக ஶாஸ்த்ரஸமாநார்த்த₂ம் என்று கொள்ளவேணும். இஸ்ஸம்ப்ரதா₃யார்த்த₂த்தை, பாட்டுக்களில் உபபத்தியுடனே ஏறிட்டு ப்ரகாஶிப்பிக்கிறோம்.

முதல் திருவாய்மொழி பூர்வத்₃விகத்தோடு சேரும்படியைத் தெரிவிக்கிறோம். அது எங்ஙனேயென்னில்; முதல்பாட்டு நாலடியும் சதுஸ்ஸூத்ர்யர்த்த₂மாகவும், "மனனகம்" என்கிற இரண்டாம் பாட்டு ஈக்ஷத்யாநந்த₃மயாந்தராதி₃த்யாதி₄கரணார்த்த₂மாகவும், "இலனது" என்கிற மூன்றும் பாட்டு, ஆகாஶ ப்ராண ஜ்யோதிரிந்த்₃ரப்ராணாதி₄கரணார்த்த₂மாகவும், "நாமவன்" "அவரவர்" "நின்றனர்" என்கிற நாலாம் பாட்டுத் தொடங்கி மூன்றுபாட்டும், த்ரிபாத்₃யர்த்த₂மாகவும், ஆக ஆறுபாட்டும் ப்ரத₂மாத்₄யாயார்த்த₂மாய், "திடவிசும்பு" என்கிற ஏழாம்பாட்டு த்₃விதீயலக்ஷண ப்ரத₂மபாதா₃ர்த்த₂மாகவும், "சுரரறி" "உளனெனில்"என்கிற எட்டாம் பாட்டும், ஒன்பதாம்பாட்டும் தர்க்கபாதா₃ர்த்த₂மாகவும், "பரந்ததண்" என்கிற பத்தாம்பாட்டும், நிக₃மநபாட்டும் வியத்பாத₃ துரீயபாதா₃ர்த்த₂மாகவும் ஆக ஏழாம் பாட்டுத் தொடங்கி நிக₃மத்தளவும் த்₃விதீயாத்₄யாயார்த்த₂மாய், இத்திருவாய்மொழி பூர்வத்₃விகார்த்த₂மாகக் காணலாம். அதில் முதற்பாட்டில், "உயர்வறவுயர் நலமுடையவன் யவன்" என்கிற சந்தை ப்ரத₂மாதி₄கரண ஸமாநார்த்த₂ம். அது எங்ஙனேயென்னில்; ப்ராப₄ாகரமதரீத்யா ஶப்₃த₃த்துக்குக் கார்யார்த்த₂த்திலே போ₃த₄கத்வ ஶக்தியாகையாலும் பரிநிஷ்பந்ந வஸ்துவிலே ஶப்₃த₃த்துக்கு போ₃த₄கத்வ ஶக்தியில்லாமையாலும், வேதா₃ந்தங்கள் பரிநிஷ்பந்நமான ப்₃ரஹ்மத்திலே ப்ரமாணமாகமாட்டாது. ப்ரமாணமல்லாமையால் ஸாங்கா₃த்₄யயநம் பண்ணினவனுக்கும் அநந்த ஸ்தி₂ர ப₂லாபாதப்ரதீதி வரமாட்டாது. **3. "அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்யயாஜிநஸ் ஸுக்ருதம் ப₄வதி"** இத்யாதி₃ வாக்யங்களில் சாதுர்மாஸ்யாதி₃ கர்மங்களுக்கும் அக்ஷயமான ப₂லம் ஶ்ருதமாகையாலும், கர்மால்

பாஸ்தி2ர ப2லத்வநிர்ணயம் ஸித்3தி4யாது; ஆகையால், கர்மணும் அல்பாஸ்தி2ர ப2லவத்வநிர்ணய ஸஹித அநந்தஸ்தி2ரப3லாபாதப்ரதீதிரூப விஶிஷ்டஹேது ஸித்3தி4யாமையாலே, வேத3ாந்தாரம்ப4ம் க4டியாதென்கிற பூர்வபக்ஷத்திலே—அம்ப3ா தாத மாதுலாதி3 ஶப்3த3ங்களில் ஸித்3த4ரூபமான மாதாபித்ராத்3யர்த்த2ங்களில் ப்ரத2ம வ்யுத்பத்தி காண்கையாலும், அது கார்யரூபார்த்த2த்திலென்கிற நிர்ப3ந்த4மில்லாமையாலும், வேத3ாந்தங்களுக்குப் பரிநிஷ்பந்ந பே3ாத4ந ஸாமர்த்2ய முண்டாய், அதுகள் ப்ரமாணமாகையாலே, அநந்தஸ்தி2ரப2லாபாதப்ரதீதிரூப விஶேஷ்யாம்ஶம் லபி4க்கும். கர்மவிசாரம் பண்ணினவனுக்கு ஆவ்ருத்திவித4ாநாதி3 களாலே கர்மங்களுக்கு ஸாதிஶய ப2லத்வம் அவக3தமாகையாலும், அக்ஷய்யத்வ கீர்த்தநம் சிரகால ஸ்த2ாயித்வாபி4ப்ராயமாக—1.**''வாயுஶ்சாந்தரிக்ஷஞ்சைதத3ம்ருதம்''** என்கிறவிடத்தில் அம்ருதத்வம்போலே நிர்வஹிக்க வேண்டுகையாலும், கர்மணும் அல்பாஸ்தி2ரப2லத்வநிர்ணயரூப விஶேஷணும்ஶம் ஸித்3தி4க்கும். இப்படி விஶிஷ்டஹேது லபி4க்கையாலே ஶாஸ்த்ராரம்ப4ம் க4டிக்குமென்றிறே ப்ரத2மாதி4 கரணார்த்த2ம். இனி ''உயர்வற வுயர்நலமுடையவன்'' என்று அநவதி4காநந்த ஸ்தி2ரப2லரூப கு3ணவிபூ4திமத்தையைச் சொல்லி, ''யவன்'' என்று இவ்வர்த்த2த்துக்கு ''ஆநந்தோ3 ப்3ரஹ்ம''இத்யாதி3 ஶ்ருதிப்ரமாண ப்ரஸித்3தி4யையும் காட்டுகையாலே, ஸித்3த4வஸ்துவான பரப்3ரஹ்மம் வேத3ாந்த வேத்3யமென்று ஸித்3தி4க்கையால், இச்சந்தை விஶேஷ்யாம்ஶமான அநந்தஸ்தி2ரப2லாபாதப்ரதீதியை ஸூசிப்பிக்கிறது; ''உயர்வற'' என்கிற இது ப்3ரஹ்மாதி3களுடைய கர்மாதீ4 நோச்ச்2ராயம் ப4க3வதுச்ச்2ராயாபேக்ஷயா ''இல்லை'' என்னும்படியிருக்குமென்று சொல்லுகையாலே, கர்மங்களினுடைய அல்பாஸ்தி2ரப2லத்வ நிர்ணயத்தை ஸூசிப்பிக்கிறது; ஆக, ''உயர்வற உயர்நலமுடையவன் யவன்'' என்கிறவளவாலே விஶிஷ்டஹேதுவை ஸூசிப்பிக்கையாலே, ஶாரீரகாரம்ப4 ஸமர்த்த2நபர ப்ரத2ம ஸூத்ரார்த்த2ம் இச்சந்தை என்னக்குறையில்லை; கிஞ்ச; ப்3ரஹ்மஶப்3த3 ப்ரவ்ருத்திநிமித்தமான நிரதிஶய ப்3ருஹத்த்வத்தை ''உயர்வற உயர்நல முடையவன்'' என்று முக்தகண்ட2மாக அருளிச்செய்து, ''அவன் துயரறு சுடரடி தொழுதெழு'' என்று அவன் திருவடிகளைத் தொழுது உஜ்ஜீவியென்று ஜிஜ்ஞாஸா ப2ல நிர்ணய கார்யோக்திமுகே2ந ஜிஜ்ஞாஸா ஶப்3த3ார்த்த2த்தை ஸூசிப்பிக்கையாலும் இச்சந்தை ப்ரத2மாதி4கரணார்த்த2ம். இப்பாட்டுத்தான் வாக்யைக வாக்யமாக ஓரந்வயத்தையும், வாக்யத்ரயமாக ஓரந்வயத்தையும் உடைத்தாகையாலே, வாக்யத்ரயபக்ஷத்தில் இவ்வர்த்த2ம் ஸ்வரஸமாய் ஸித்3தி4க்கும்.

''மயர்வற மதிநலமருளினன் யவன்'' என்கிற இது ஜந்மாதி4கரண ப்ரமேய மானபடி எங்ஙனேயென்னில்; ப்3ரஹ்மஸித்3தி4யில் வேத3ாந்தம் ப்ரமாணமானாலும், லக்ஷணம் ப்3ரஹ்மத்துக்குக் கிடையாமையாலே ப்3ரஹ்மப்ரதிபத்தி வரமாட்டாது; அது எங்ஙனேயென்னில்; 2 **''யதோ வா இமாநி''** இத்யாதி3 வாக்யம்

ஜந்மகாரணத்வாதி₃களை லக்ஷணமாக அறிவிப்பிக்கமாட்டாது; ஜந்மகாரணத்வாதி₃களை விஶேஷணமென்கிறீரோ? உபலக்ஷணமென்கிறீரோ? விஶேஷண பே₄த₃ப்ரயுக்த விஶேஷ்யபே₄த₃ம் ப்ரஸங்கி₃க்கையாலே விஶேஷணமென்னக் கூடாது. உபலக்ஷ்யோபலக்ஷணவ்யதிரிகத உபலக்ஷ்யக₃த ஜ்ஞாதாம்ஶம் கிடையாமையாலே உபலக்ஷணமென்னவும கூடாது—என்று பூர்வபக்ஷம ப்ராப்தமாமளவில; அநேகவிஶேஷணவிஶிஷ்ட விஶேஷ்யைகயஸ்ய — "தே₃வத₃த்த: ஶ்யாமோ யுவா லோஹிதாக்ஷ:" இத்யாதி₃ஷு த₃ர்ஶநாத், "க₂ண்டோ₃ முண்ட₃: பூர்ணஶ்ருங்கோ₃ கௌ₃:" இத்யாதி₃ஷு க₂ண்ட₃த்வமுண்ட₃த்வாதி₃ விருத்₃த₄ விஶேஷணாமேவ விஶேஷ்ய பே₄த₃கத்வத₃ர்ஶநாத், ஜந்மாதி₃காரணத்வாதே₃: காலபே₄தே₃ந ப்₃ரஹ்மணி அவிருத்₃த₄த்வாச்ச விஶேஷணதவம உபபந்நம; உபலக்ஷணோபலக்ஷ்ய வயதிரிகத உபலக்ஷ்யக₃த ப்₃ரஹ்மத்வாதி₃யான த்ருதீயாகாரம் லபி₄க்கையாலே உபலக்ஷணத்வமும கூடும். இப்படி ஜந்மகாரணத்வாதி₃கள் ப்₃ரஹ்மலக்ஷணமாகையால லக்ஷணங்களால் ப்₃ரஹ்மப்ரதிபத்தி வருகையாலே ப்₃ரஹ்மவிசாரம் க₄டிக்குமெனறிறே ஜந்மாதி₄கரணப்ரமேயம் ; இனி இவ்விடத்தில் "மயர்வற மதிநலமருளினன் யவன்" என்று - அஜ்ஞாந அந்யதா₂ஜ்ஞாந விபரீத ஜ்ஞாநரூபமான மயர்வுபோமபடி ப₄க்திரூபாபந்நஜ்ஞாநத்தை அருளினனென்று சொல்லுகையாலே, அநுக்₃ராஹகத்வம் த்₄யேயத்வவ்யாப்தமாய், 1. **"காரணம் து த்₄யேய:"** என்கிறபடியே த்₄யேயத்வம் காரணத்வாக்ஷேபகமாயிருக்கையாலே, தத₃ாக்ஷேபகத்₄யேயத்வாக்ஷேபகமான அநுக்₃ராஹகத்வரூப த₄ர்மகத₂நமுகே₂ந ஜந்மகாரணத்வரூப ப்₃ரஹ்மலக்ஷணத்தை ஸூசிப்பிக்கையாலே, ஜந்மாதி₄கரண ப்ரமேயம் இச்சந்தை. கிஞ்ச; "மயர்வற" என்று அஜ்ஞாநநிவ்ருத்தியைச் சொல்லுகையாலே 2. **"அவித்₃யாநிவ்ருத்திரேவ ஹி மோக்ஷ:"** என்கிற முக்திகாரணத்வம் கண்டோ₂க்தமாயிருக்கிறது. அந்த மோக்ஷந்தான்—3. **"ஜக₃து₃த்₃ப₄வஸ்தி₂தி ப்ரணஶ ஸம்ஸாரவிமோசநாத₃ய:"** என்று உத்₃ப₄வஸ்தி₂திப்ரணஶங்களைப்போலே ஸம ஸாரவிமோசநத்தையும் ப்₃ரஹ்மகார்யமாக அபி₄யுக்தர் அருளிச்செய்கையாலே ப்₃ரஹ்மகார்யமிறே ; அதுதானும் ஜந்மகாரணத்வாதி₃களைப்போலே ப்₃ரஹ்ம லக்ஷணம் ; 4. **"யத் ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி"** என்கிற ஶ்ருதியிலே 4. **"யத₃பி₄ஸம் விஶந்தி"** என்று ஜக₃த்ப்ரளயகாரணத்வத்தையும், ஸம்ஸாரவிமோசநகாரணத்வத்தையும் சொல்லிற்றிறே ; ஶ்ருதப்ரகாஶிகையிலே ப₄ட்டரும், அப்படியே வ்யாக்₂யாநம் செய்தருளினர். ஆனால் ஜந்மகாரணத்வம், ஸ்தி₂திகாரணத்வம், ஜக₃த்ஸம்ஹாரகாரணத்வம இவை இத்தனையையும் விட்டு மோக்ஷகாரணத்வ மாத்ரத்தையே அருளிச்செய்வானென்? என்னில ; 'ஜந்மகாரணத்வாதி₃கள் ஸமுதி₃தமே ப்₃ரஹ்மலக்ஷணமென்கிற நிர்ப₃ந்த₄மில்லை ; ஏகைகமும் லக்ஷணமாம்' என்கிற அர்த்த₂த்தை ஸூசிப்பிக்கைக்காக, மோக்ஷகாரணத்வமாத்ரத்தை அருளிச் செய்தார். ஆனால், ஜந்மகாரணத்வாதி₃களில் அந்யதமத்தை அருளிச்செய்தாலும் இந்த ப்ரயோஜநம ஸித்₃தி₄ககுமே. விஶேஷித்து மோக்ஷகாரணத்வத்தை அருளிச்

செய்வானென்னென்னில், வேத₃ாந்த ஶாஸ்த்ரத்துக்கு ப்ரயோஜநம் மோக்ஷமாகையாலும், தமக்கு எம்பெருமான் மோக்ஷத்தைத் தந்தருளுகையாலும், மோக்ஷ காரணத்வத்தை அருளிச்செய்தார். ப்₃ரஹ்மத்தினுடைய ஸ்ருஷ்டிகாரணத்வாதி₃கள் ஏகைகமே சித₃சித்₃வ்யாவ்ருத்தமாயிறேயிருப்பது. ஸூத்ரபா₄ஷ்யங்களில் ஜந்மகாரணத்வாதி₃களை ஸமுதி₃தமாகச் சொல்லுகைக்கு ப்ரயோஜநம் ஜிஜ்ஞாஸ்ய ப்₃ரஹ்மத்தினுடைய நிரதிஶய ப்₃ருஹத்த்வ ஸித்₃தி₄யென்று ஶ்ருத ப்ரகாஶிகையிலே ஸ்பஷ்டமாக ப₄ட்டர் அருளிச்செய்ததைக் கண்டுகொள்வது. ஆகையால் "மயர்வற" என்று—ஸம்ஸார விமோசந காரணத்வத்தை முக்த கண்ட₂மாக அறிவிப்பிக்கிற இச்சந்தை ஜந்மாதி₄கரண ஸமாநார்த்த₂மென்னக் குறையில்லை. ஆக எல்லாவற்றாலும் "மயர்வற மதிநலமருளினன்" என்கிற இரண்டாமடி ஜந்மாதி₄கரணப்ரமேயம்.

"அயர்வறு மமரர்களதிபதியவன்" என்கிற மூன்றாமடி ஶாஸ்த்ரயோநித்வாதி₄கரணார்த்த₂மானபடி எங்ஙனே? என்னில்:— வேத₃ாந்தங்களுக்கு ஸித்₃த₄மான ப்₃ரஹ்ம வஸ்துவில் போ₃த₄கத்வ ஶக்தியுண்டாய் ஜந்மகாரணத்வாதி₃கள் ப்₃ரஹ்ம லக்ஷணமாய் ப்₃ரஹ்ம ப்ரதிபத்தி லபி₄த்தாலும் வேத₃ாந்தாரம்ப₄ம் கூ₄டியாது; ஶாஸ்த்ரரூப ப்ரமாணம்—ப்ரமாணாந்தராப்ராப்தமுமாய், ப்ரமாணாந்தர விரோத₄மு மின்றிக்கேயிருக்கிற அர்த்த₂த்திலே போ₃த₄கமாயிருக்கும்; இனி, ப்₃ரஹ்மத்தினுடைய நிமித்தத்வாம்ஶம், **1. "க்ஷித்யாதி₃கம் ஸகர்த்ருகம்; கார்யத்வாத் க₄டவத்"** என்கிற அநுமாநத்தாலே ஸித்₃தி₄க்கும்; உபாத₃ாநத்வாம்ஶம்—நிமித்த பூ₄தனை குலாலாதி₃களில் உபாத₃ாநத்வம் காணாமையாலே, ப்ரத்யக்ஷாதி₃ ப்ரமாண விருத்₃த₄மாயிருக்குமாகையால், ஸாத₄க பா₃த₄க ப்ரமாண விரஹிதமல்லாமையாலே, ப்₃ரஹ்மகாரணத்வத்தை வேத₃ாந்தங்கள் போ₃தி₄ப்பிக்கமாட்டாமையாலே தத்₃விசாரம் அநாரம்ப₄ணீயமென்கிற பூர்வபக்ஷத்தில், அநுமாநத்தாலே ப்₃ரஹ்மத்தினுடைய நிமித்த காரணத்வத்தை ஸாதி₄க்குமளவில் லோக த்₃ருஷ்ட குலாலாதி₃ க்ஷேத்ரஜ்ஞஸஜாதீயனாய் ஸித்₃தி₄ப்பனொழிய விவக்ஷிதனான ஈஶ்வரன் ஸித்₃தி₄யாமையாலே, அநுமாநத்தாலே ஈஶ்வரனுடைய நிமித்தத்வாம்ஶத்தை ஸாதி₄க்கவொண்ணாமையாலே, அநுமாநம் ஸாதி₄க்கமாட்டாது; அபரிமிதஶக்திகனான நிமித்தேஶ்வரனுக்கே லோகாபரித்₃ருஷ்டமான உபாத₃ாநத்வாம்ஶமும் ப்ரமாணாந்தரபா₃தி₄தமல்லாமையாலே, உபாத₃ாநத்வாம்ஶத்தில் ப்ரமாணாந்தரம் பா₃த₄கமாகமாட்டாது. ஆகையால், ஸாத₄க பா₃த₄க ப்ரமாண விரஹிதமான ப்₃ரஹ்ம காரணத்வத்தில் வேத₃ாந்தமே ப்ரமாணமாகவேண்டுகையாலே, தத்₃விசாரம் ஆரம்ப₄ணீயமென்றிறே ஶாஸ்த்ரயோநித்வாதி₄கரண ப்ரமேயம். இனி, "அயர்வறும் அமரர்களதிபதியவன்" என்று-ப₄க₃வத்₃ விஸ்ம்ருதியற்ற நித்யஸூரி ஶேஷித்வத்தை அருளிச்செய்தார்; ஸூரிஸேவ்யத்வந்தான் ப்ரமாணாந்தர ப்ராப்தமுமன்று; ப்ரமாணாந்தர விருத்₃த₄முமன்று; இப்படி ஸாத₄க பா₃த₄க ப்ரமாண

விரஹிதமான ஸூரிஸேவ்யத்வத்தை அருளிச்செய்கையாலே, 1. "**தத்ஸாமாந்யாதி₃தரேஷு தத₂ாத்வம்**" என்கிற ந்யாயமாக ஸர்வஜ்ஞத்வாதி₃கு₃ணவிஶிஷ்ட ப்₃ரஹ்மத்தினுடைய ஜக₃த்காரணத்வத்துக்கும் வேதா₃ந்தமே ப்ரமாணமாகவேணுமென்று அறிவிப்பித்தருளினாராமத்தனை; ஆகையால், அப்ராப்தார்த்த₂மும் அவிருத்₃த₄ார்த்த₂மும் ஶாஸ்த்ரமென்கிற அர்த்த₂த்தைக் காட்டுகிற இச்சந்தை ஶாஸ்த்ர யோநியதி₄கரண ப்ரமேயமென்னத் தட்டில்லை; கிஞ்ச "அதிபதி" என்கிறவிடத்தில் "பதி" என்கிற இத்தாலே பாலநகர்த்ருத்வரூப நிமித்தத்வத்தை அருளிச்செய்து, "அதி₄க: பதி:-அதி₄பதி:" என்று அந்தப் பதிஶப்₃த₃வாச்யனை நிமித்த பூ₄தனுடைய ஆதி₄க்யத்தை அருளிச்செய்தார்; அந்த ஆதி₄க்யந்தானும் – லோக ஸித்₃த₄ நிமித்த பூ₄தரான குலாலாதி₃வைலக்ஷண்யம். தத்₃வைலக்ஷண்யந்தானும் – ஜக₃து₃பாதா₃நத்வம் முதலானவை. இப்படி நிமித்தோபாதா₃நைக்யத்தை "அதிபதி" என்று அருளிச்செய்கையாலே, ப்ரமாணாந்தராப்ராப்த ப்ரமாணாந்தராவிருத்₃த₄ார்த்த₂க ஶாஸ்த்ர ப்ராமாண்யத்தை இச்சந்தை ஸூசிப்பிக்கிறது. ஆக இவையெல்லாவற்றாலும் இது ஶாஸ்த்ரயோநியதி₄கரண ப்ரமேயம்.

"துயரறு சுடரடி தொழுதெழு" என்கிற நாலாமடி ஸமந்வயாதி₄கரண ஸமாநார்த்த₂மானபடி எங்ஙனே? என்னில்; ப்ரவ்ருத்திநிவ்ருத்திபரமாயிருக்கிற "அர்த்த₂ார்த்தீ₂ ராஜகுலம் க₃ச்சே₂த்" "மந்த₃ாக்₃நிர் நாம்பு₃ பிபே₃த்" 2. "**ஸ்வர்க்க₃காமோ யஜேத**" 3. "**ந களஞ்ஜம் ப₄க்ஷயேத்**" இத்யாதி₃ வாக்யங்களுக்கே ப்ரயோஜந பர்யவஸாயித்வமுண்டு; ஸித்₃த₄வஸ்து போ₃த₄கவாக்யங்களுக்கு அது இல்லை; ஆகையால் ஸித்₃த₄மான ப்₃ரஹ்ம ப்ரதிபாத₃க வாக்யங்களுக்கு ப்ரயோஜந பர்யவஸாநம் இல்லாமையாலே வேதா₃ந்த ஶாஸ்த்ரம் அநாரம்ப₄ணீயமென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாமளவில், நிதி₄போலே ப்₃ரஹ்மமே ஸ்வயம்ப்ரயோஜநரூபம்; தத்ப்ரதிபாத₃க வேதா₃ந்த வாக்யங்களே ஸாக்ஷாத் ப்ரயோஜந பர்யவஸாயிகள்; இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹார ஸாத₄ந போ₃த₄நத்₃வாரா, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திபர வாகயங்களுக்கு ப்ரயோஜந பர்யவஸாயித்வமொழிய நேரே ப்ரயோஜந பர்யவஸாயித்வமில்லை. ஆகையால், அநந்த கல்யாணகுண பரிபூர்ணமான ப்₃ரஹ்மமே ப்ரயோஜநமாய், தத்ப்ரதிபாத₃கமான ஶாஸ்த்ரம் ப்ரமாணமாய் ஸித்₃தி₄க்கையாலே, ஸித்₃த₄ ப்₃ரஹ்மப்ரதிபாத₃கமான ஶாஸ்த்ரம் ஆரம்ப₄ணீயமென்றிறே ஸமந்வயாதி₄கரணத்தின் பொருள். இனி "துயரறு சுடரடி தொழுதெழு" என்று "து₃:க்க₂நிவர்த்தகமாய் விகஸ்வர தேஜோரூபமான திருவடிகளிலே கைங்கர்யத்தைப்பண்ணி உஜ்ஜீவி" என்றருளிச்செய்தார்; அத்தாலே A "பொன்னடி" என்று சொல்லுகிற திருவடிகளே ப்ரயோஜநமாய், தத்பரிசர்யையே புருஷார்த்த₂மாக ப்ரார்த்தி₂த்து, விலக்ஷணமான ப்₃ரஹ்மமே பரமப்ரயோஜநமென்று அறிவிப்பிக்கையாலே, ப்₃ரஹ்மத்தினுடைய ஸாக்ஷாத் ப்ரயோஜநத்வத்தை ஸாதி₄த்து, ஶாஸ்த்ரம் ஆரம்ப₄ணீய

A பெரியதிருமொழி 5-8-9; பெரியாழ் திரு 3-2-8

மென்று சொல்லுகிற ஸமந்வயாதி₄கரணார்த்த₂ம் இச்சந்தை. ஆகையால், முதற் பாட்டு–ஸ்வரூபமாக ஶாஸ்த்ராரம்ப₄ ஸமர்த்த₂நபரமான சதுஸ்ஸூத்ர்யர்த்த₂மாக ஸதா₃சார்ய ப்ரஸாத₃லப்₃த₄ வேதா₃ந்தத்₃வய ஶ்ரவணமுடையவர்களுக்குக் கைக்கொள்ளக் குறையில்லை.

1. ப₄க்தாம்ருதாத்₃யகா₃தா₂யாஶ் சதுஸ்ஸூத்ர்யேககண்ட₂தா ।
நிரூபிதா வேத₃மௌளித்₃வயநிஷ்ட₂ஸதாம் முதே₃ ॥

**இதி ப்ரத₂மகா₃தா₂ சதுஸ்ஸூத்ர்யைககண்ட₂யம்.**

முதற்பாட்டு சதுஸ்ஸூதர்யர்த்த₂மென்னுமிடம் உபபாதி₃க்கப்பட்டது; இனி, மேல் இரண்டு பாட்டு 2. "**ஈக்ஷதேர் நாஶப்₃த₃ம்**" என்று தொடங்கி பாத₃ஶேஷ ஸமாநார்த்த₂மாயிருக்கும்படி உபபாதி₃க்கப்படுகிறது. இப்பாத₃ஶேஷந்தானும்–ஸாக்ஷாத் காரணவாக்ய நிரூபணபரமான ப்ரத₂மபேடிகை அதி₄கரண பஞ்சகாத்மகமாய், த்₃விதீயபேடிகை அதி₄கரணத்₃வயாத்மகமாயிருக்கும்; ப்ரத₂மபேடிகையும்—ஸாமாந்ய ஶப்₃த₃ங்களுக்குப் பரமாத்மரூப விஶேஷபர்யவஸாயித்வ ப்ரதிபாத₃கமாய் ஒரு பேடிகையும், அர்த்த₂ாந்தர ப்ரஸித்₃த₄ங்களான ஆகாஶ ப்ராணாதி₃ விஶேஷ ஶப்₃த₃ங்களுட்படப் பரமாத்மரூப விஶேஷ பர்யவஸாயி என்றொரு பேடிகையுமென்று இப்படி அவாந்தரபேடிகாத்₃வய யுக்தமாயிருக்கும். இதில் "மனனகம்" என்கிற இரண்டாம்பாட்டு காரணவாக்ய நிரூபணபரமாயுள்ள ப்ரத₂ம பேடிகையில் ஸாமாந்ய ஶப்₃த₃ங்கள் பரமாத்மரூப விஶேஷபர்யவஸாயிகள் என்கிற ஈக்ஷத்யாநந்த₃மயாந்தராதி₃த்யாதி₄கரணரூப அவாந்தர ப்ரத₂மபேடிகா ஸங்க₃தார்த்த₂மாயிருக்கும்; "இலனது" என்கிற மூன்றாம்பாட்டு—ப்ரத₂மபேடிகையில் அவாந்தர ரூபமான ஆகாஶ ப்ராணாதி₄கரணரூப அவாந்தரத்₃விதீய பேடிகையோடும், காரணத்வஸமவ்யாப்தமான த₄ர்மகத₂நமுகே₂ந காரணவாக்ய நிரூபணபரமாயுள்ள ஜ்யோதிரிந்த்₃ரப்ராணாதி₄கரணரூபமான ப்ரத₄ாநத்₃விதீய பேடிகையோடும் ஸமாநார்த்த₂மாயிருக்கும்.

"மனனகம்" என்கிற பாட்டு, ஈக்ஷத்யாநந்த₃மயாந்தராதி₃த்யாதி₄கரண ப்ரமேயமானபடி என்னென்னில்; இம்மூன்று அதி₄கரணத்திலும், ஈக்ஷத்யதி₄கரணத்தில்—3. "**ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீத்**" இத்யாதி₃ வாக்யத்தில் ஜக₃த்காரணதயா ப்ரதிபந்நமான ஸச்ச₂ப்₃த₃வாச்யவஸ்து ப்ரத₄ாநமாகவேணும்; இத₃ம்ஶப்₃த₃வாச்யமான ஸத்வ ரஜஸ்தமோமய ஜக₃த்துக்கு தத்₃யுக்தமான ப்ரத₄ாநம் காரணமாமொழிய, ஸத்வரஜஸ்தமோவிது₄ரமான ப்₃ரஹ்மம் காரணமாகமாட்டாது; இன்னமும், அநுமாநாகாரவாக்யவேத்₃யதயா ஆநுமாநிக ப்ரத₄ாநமே இவ்வாக்யத்தில் காரணமாய்த் தோற்றுகிறது–எனறு பூர்வபக்ஷம் வருமளவில்; ஜக₃த்ஸர்க்கோ₃பயுக்த முக்₂யேக்ஷணம் ப்ரத₄ாநத்துக்குக் கூடாமையாலும், ஸர்வஜ்ஞமான ப்₃ரஹ்மத்துக்கு உள்ளதொன்றாகையாலும் சித₃சித்₃விஶிஷ்டப்₃ரஹ்மம் ஜக₃த்காரண

மாகையால ஶரீரபூ₄த சித₃சித்₃த்₃வாரா ஸத்வரஜஸ்தமோமயாங்வயம் கூடுகை யாலே, ஜகத்ஸாலக்ஷண்யம் ப்₃ரஹ்மத்துககும் உண்டாகையாலும், அநுமாநா வயவங்களில் ப்ரத₄ாநமான ஹேத்வவயவம் அநுபாத்தமாகையாலே, இவ்வாகயத் துக்கு அநுமாநாகாரத்வம் அஸித்₃த₄மாகையாலும, ஸச்ச₂ப்₃த₃ வாச்ய மான காரணம் ப்ரத₄ாநமன்று, பரமாத்மாவென்று ஸித்₃த₄ாந்தித்து, ப்₃ரஹ்மத்தினுடைய அசித்₃வயாவ்ருத்தி ப்ரதிபாதி₃க்கப்பட்டது.

ஆநந்த₃மயாதி₄கரணத்தில்—ப்₃ரஹ்மம் அசித்₃வ்யாவ்ருத்தமேயாகிலும் ஜீவ வயாவருத்தமாக மாட்டாது; 1. "**தஸ்மாத்₃வா ஏதஸ்மாத்₃விஜ்ஞாநமயாத் அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்த₃மய:**" என்கிறவிடத்தில் ஆநந்த₃மய ஶப்₃த₃வாச்யன் ஜீவனாகை யாலே. அவன் ஜீவனாகைக்கு அடி—2. "**தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா**" என்று ஶரீர ஸம்ப₃ந்த₄ ஶ்ரவணமும், 3. "**அநேந ஜீவேநாऽऽத்மநாநுப்ரவிஶ்ய**" என்று ஸாமாநாதி₄ கரண்யத்தாலே ஜீவப்₃ரஹ்மனைரைக்யமும. ஆகையால், ஜகத்காரணதயா நிர் தி₃ஷ்டனான ஆநந்த₃மயன் ஜீவனேஎன்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாமளவில், ஶதகு₃ணி தோத்தரக்ரமேண அப்₄யஸ்யமாநாநந்த₃ம, ஸகலவப₄ாகி₃யாய்(அ)பரிமிதகர்மவஶ்ய னான ஜீவனுககு க₄டியாமையாலும், பரமாத்மாவுக்கே அது உள்ளதொன்றாகையா லும், "ஶாரீரன்" என்கிறது-ஜகச்ச₂ரீரனென்கிறதாய் கர்மக்ருத ஶரீரத்வமல்லாமை யாலும், ஸாமாநாதி₄கரண்ய நிர்தே₃ஶத்தாலே ஶரீராத்மப₄ாவ நிப₃ந்த₄நமான ஐக்யத் தைச் சொல்லுகிறதொழிய ஸ்வரூபைக்யத்தைச் சொல்லாமையாலே ஜீவப்₃ரஹ்ம பே₄த₃ம் ஸித்₃தி₄க்கையாலும், ஜகத்காரணபூ₄தனான ஆநந்த₃மயன் ப₃த்₃த₄ முக்தா வஸ்த₂ ஜீவனன்று, தத்₃விலக்ஷணனான பரமாத்மா என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

அந்தராதி₃த்யாதி₄கரணத்திலே—கேவலஜீவன் ஜகத்காரணமாகமாட்டானே யாகிலும், உபசித புண்ய விஶேஷர்களான ஆதி₃த்யாதி₃ சேதநர்களில் ஒருவன் ஜகத்காரணமாகலாம். அது எங்ஙனேயென்னில்; 4. "**ய ஏஷோऽந்தராதி₃த்யே ஹிரண்மய: புருஷோ த்₃ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ரு:**" இத்யாதி₃ ச₂ாந்தோ₃க்₃ய வாக்₃யத்திலே கரசரணாதி₃ரூப ஶரீரஸம்ப₃ந்த₄ம் காரணவஸ்துவுக்கு ப்ரதிபாதி₃தமா யிருக்கையாலும், அதுள்ளது கர்மக்ருத ஶரீரஸமப₃ந்த₄முடைய ஜீவனுக்கேயாகை யாலும, விலக்ஷணஜீவனே ஜகத்காரணமென்று பூர்வபக்ஷம் வருமளவில், 5. **ஸர்வேப்₄ய: பாப்மப்₄ய உதி₃த:**" என்று அபஹத பாப்மத்வம் ஶ்ருதமாகையாலும, பரமாத்மாவுக்கும ஶ்ருதிஸ்ம்ருதி ப்ரஸித்₃த₄மாய் அப்ராக்ருதமாயிருந்துள்ள தி₃வ்ய மங்க₃ளவிக்₃ரஹங்களுண்டாகையாலும், விலக்ஷணவிக்₃ரஹயுக்தனாய இவ்வாக்யத் தில் ப்ரதிபாதி₃க்கப்பட்டவன் உபசிதபுண்ய விஶேஷனான ஜீவனல்லன், தத்₃ விலக்ஷணனான பரமாத்மாவென்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

இனி "பொறியுணர்வவையிலன்" என்று—ஐந்த்₃ரியிக ப்ரத்யக்ஷவிஷயமான அசித்தின்படியல்லன் என்கையாலே, இச்சங்கை அசித்₃வ்யாவ்ருத்தமான ப்₃ரஹ்ம

ஸ்வரூபத்தை ஸாதி₄க்கிற ஈக்ஷத்யதி₄கரணார்த்த₂ம் என்று அறியலாம். "மனனக மலமற மலர்மிசை யெழுதரு மனனுணர்வளவிலன்" என்று—மநோநிஷ்ட₂மான அவித்₃யாதி₃கள் யோக₃ாப்₄யாஸப₃லத்தாலே கழியக்கழிய, மேலநோக்கி அபி₄ வ்ருத்₃த₄மாய் வருகிற மாநஸஜ்ஞாநத்துக்கு விஷயமான ஆத்மாவின்படியல்லன் என்கையாலே ஶாத்₃த₄யஶாத்₃த₄யுப₄யாவஸ்த₂ ஜீவவ்யாவ்ருத்தியை ப்₃ரஹ்மத் துக்கு அறிவிப்பிக்கிற ஆநந்த₃மயாதி₄கரண ஸமாநார்த்த₂ம் இச்சந்தையென்னு மிடம் ஸ்பஷ்டமாக அறியலாம்; "உணர்முழுநலம்" என்று கட்டடங்க ஜ்ஞாநத் வாஶ்ரயனும், ஆநந்த₃த்வாஶ்ரயனும் இருப்பனென்று அருளிச்செய்கையாலே காரணவஸ்துவுக்கு அசேதநப்ரத₄ாநவ்யாவர்த்தகமான ஜக₃த்ஸர்க்கே₃க்ஷணாதி₃ த₄ர்மத்தையும், ஜீவவ்யாவர்த்தகமான நிரதிஶயாநந்த₃ாப்₄யாஸத்தையும் ஸூசிப்பித் தருளினர். ஆகையால், **1. "ஈக்ஷதே:" 2. "அப்₄யாஸாத்"** என்கிற ஹேத்வம்ஶம் இச்சந்தையாலே ஸூசிதம். "எதிர் நிகழ் கழிவினும் இனனிலன்—மிகுநரையிலன்" என்று—காலத்ரயத்திலும் தன்னோடு ஒப்பாரையும் மிக்காரையும் உடையனல்ல னென்றும், நிஸ்ஸமாப்₄யதி₄கனென்றும் அருளிச்செய்கையாலே, புண்ட₃ரீகாக்ஷத்வ அபஹதபாப்மத்வாதி₃ த₄ர்மயோக₃த்தாலே நிஸ்ஸமாப்₄யதி₄கனான ஆதி₃த்ய மண்ட₃லாந்தர்வர்த்தியான புருஷன் விலக்ஷண ஜீவனல்லன். பரமாத்மாவேயென்று ஸித்₃த₄ாந்தித்த அந்தராதி₃த்யாதி₄கரணார்த்த₂ம் இச்சந்தையிலே ஸூசிதம்.

ஆனால், ஈக்ஷத்யதி₄கரண ப்ரமேயமான அசித்₃வ்யாவ்ருத்தியை முந்துற அருளிச்செய்யாதே, ஆநந்த₃மயாதி₄கரண ப்ரமேயமான ஜீவவ்யாவ்ருத்தியை முந்துற அருளிச்செய்கைக்கு அடி என்னென்னில்; ப்ரத₄ாந ஜீவ வ்யாவ்ருத்திகளில் ப்ரத₄ாந வ்யாவ்ருத்தி ஸூக்ஷ்மபு₃த்₃தி₄களுக்கு எளிதாய் அறியப்படுமாகையால் அவர்களுக்கு அறிகைக்கரிதான ஜீவவ்யாவ்ருத்தியை முந்துற அருளிச்செய்தார். ஆனால் ஸூத்ரகாரர் ப்ரத₄ாநவ்யாவ்ருத்தியை முந்துறச் சொல்லுவானென்னென் னில்; அசித்₃வ்யாவ்ருத்தியையும் அறியமாட்டாத எளியரானவர்களுக்கு முந்துற தத்₃வ்யாவ்ருத்தியைக் காட்டி, அவ்வளவு தெளிவு பிறந்தவனுக்கு அநந்தரம் அதிலும் ஸூக்ஷ்மமான சேதநவ்யாவ்ருத்தியைக் காட்டினர். ஆகை யால் ஆழ்வார் அருளிச்செய்கைக்கடி ஒரு க்ரமமும், ஸூத்ரகாரருக்கு மற்றைப்படி ஒரு க்ரமமும் விவக்ஷிதமாகையாலே அவ்விரண்டுக்கும் விரோத₄மில்லை. ஆனால், அசித்₃வ்யாவ்ருத்தி ஸ்பு₂டமாயிருந்ததாகில் "பொறியுணர்வவையிலன்" என்று ஆழ்வார் அசித்₃வ்யாவ்ருத்தியை அருளிச்செய்வானென்னென்னில், த்₃ருஷ் டாந்தரூபேண அருளிச்செய்தாராமித்தனை; ஆகையாலிறே பிள்ளை "அசேதந வ்யாவ்ருத்தியோபாதியும். சேதந வ்யாவ்ருத்தி என்கைக்காக 'பொறியுணர் வவையிலன்' என்று அருளிச்செய்தார்" என்று த்₃ருஷ்டாந்த பரமாக வ்யாக்₂ யாநம் செய்தருளினர்; ஆகையால் "மனனகம்" என்கிற பாட்டும் இவ்வதி₄ கரணத்ரயமும் ஏககண்ட₂மென்னுமிடம் ஸித்₃த₄ம்.

"இலனது உடையனிது" என்கிற மூன்றும்பாட்டு-ஆகாஶாதி₄கரணம் தொடங்கி அதி₄கரண சதுஷ்டய ஸமாநார்த்த₂ம் என்னுமிடத்தைத் தெளிய அறிவிக்கிறேம். ஆகாஶாதி₄கரணத்தில்—1. **"ஸர்வாணி ஹவா இமாநி பூ₄தாநி ஆகாஶாதே₃வ ஸமுத்பத்₃யந்தே"** இத்யாதி₃சா₂ந்தோ₃க்₃ய வாக்யத்தில ஆகாஶ ஶப்₃த₃வாச்யமாய்த் தோற்றுகிற ஜக₃த்காரணவஸ்து ப்ரஸித்₃த₄ாகாஶமேயாக வேணும். ஆகாஶ ஶப்₃த₃ம ப்ரஸித்₃த₄ாகாஶத்திலே ரூட₄மாகையாலும், பரமாத்மாவினிடத்தில் ஆகாஶ ஶப்₃த₃வாச்யத்வம் அப்ரஸித்₃த₄மாகையாலும் – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; ஸர்வஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிற சேதநாசேதந க்ருத்ஸ்ந ப்ரபஞ்ச காரணத்வம் என்ன, "பராயணம்" என்று சொல்லப்படுகிற ப்ராப்யத்வ ப்ராபகத்வங்கள் என்ன, இவை இத்தனையும் ப்ரஸித்₃த₄ாகாஶத்துக்குக் கூடாமையாலும், பரமாத்மாவுக்கே இது உளளதொன்றுகையாலும், 2.**"ஆ காஶதே, ஆ காஶயதி"** என்கிற வ்யுத்பத்தியாலே ஆகாஶஶப்₃த₃ம் பரமாத்மாவினிடததிலும் கூடுகையாலும், ஆகாஶஶப்₃த₃வாச்யம் ப்ரஸித்₃த₄ாகாஶமன்று, பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

ப்ராணாதி₄கரணத்திலே—3. **"ஸர்வாணி ஹவா இமாநி பூ₄தாநி ப்ராணமேவாபி₄ ஸம்விஶந்தி"** இத்யாதி₃ வாக்யத்தில், ப்ராணஶப்₃த₃வாச்யமான ஜக₃த்காரண வஸ்து ப்ரஸித்₃த₄ப்ராணனாகவேணும்; ஸர்வவஸ்துவும் ப்ராணாதீ₄நஸ்தி₂திகமாகக் காண்கையாலே – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; ஶிலாகாஷ்டா₂த்₃யசேதநங்களிலும் சேதநஸ்வரூபத்திலும் ப்ராணாதீ₄நஸ்தி₂திகத்வம் கூடாமையாலே, ஸர்வ ஜக₃த்காரணதயா நிர்தி₃ஷ்டமான ப்ராணன் ப்ரஸித்₃த₄ ப்ராணனல்லன், பரமாத்மா என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

ஜ்யோதிரதி₄கரணத்தில்—4. **"அத₂ யத₃த: பரோதி₃வோ ஜ்யோதிர்தீ₃ப்யதே"** என்கிற சா₂ந்தோ₃க்₃ய வாக்யத்தில் ஜ்யோதிஶ்ஶப்₃த₃வாச்யம் ப்ரஸித்₃த₄மான ஜ்யோதிஸ்ஸாகவேணும்; ஸ்வவாக்யத்தில் பரமாத்ம வ்யாப்தலிங்க₃ விஶேஷம் காணாமையாலும், கௌக்ஷேய ஜ்யோதிரைக்யோபதே₃ஶத்தாலும் – என்று பூர்வ பக்ஷம் வருமளவில்; ஸர்வபூ₄தங்களும் த்₃யுஸம்ப₃ந்தி₄யான ஜயோதிஸ்ஸுக்குப் பாத₃மாக வ்யபதே₃ஶிக்கையாலும், கௌக்ஷேயஜ்யோதிரைக்யோபதே₃ஶம் ப₂லார்த்த₂மாக தத₃ாத்மகத்வாநுஸந்த₄ாநவிதி₄பரமாகையாலும் நிரதிஶயதீ₃ப்தி யுக்தமான ஜ்யோதிஶ்ஶப்₃த₃வாச்யம் ப்ரஸித்₃த₄ஜ்யோதிஸ்ஸன்று, பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

இந்த்₃ரப்ராணாதி₄கரணத்தில்—5. **"ப்ராணோऽஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாமாயுரம்ருதமித்யுபாஸ்வ"** இத்யாதி₃ வாக்யங்களில் ஹிததமோபாஸநகர்மதயா நிர்தி₃ஷ்டனான இந்த்₃ரன் ஜீவனாகவேணும்; இந்த்₃ரஶப்₃த₃ம் ஜீவவிஶேஷத்திலே ரூட₄

மாகையாலும் 1. **''மாமுபாஸ்வ''** என்று ஸ்வாத்மோபாஸநத்தை அம்ருதத்வ ப்ராப்திஸாத₄நமாக உபதே₃ஶிக்கையாலும் - என்று பூர்வபக்ஷம் வருமளவில், 2. **''ஸ ஏஷ ப்ராண ஏவ ப்ரஜ்ஞாத்மாऽऽநந்தே₃ாऽஜரோऽம்ருத:''** என்று இந்த்₃ர ப்ராண ஶப்₃த₃நிர்தி₃ஷ்டனிடத்தில் ஆநந்த₃ாஜராம்ருதஶப்₃த₃ஸாமாநாதி₄கரண்யம் அந்வயிக்கவேண்டுகையாலும், 1. **''மாமுபாஸ்வ''** என்று ஸ்வஶரீரகபரமாத்மோபாஸநத்தை விதி₄த்ததொழிய கேவலஜீவோபாஸந விதி₄யல்லாமையாலும், ஹிததமோபாஸநகர்மதயா நிர்தி₃ஷ்டன் சேதநனை இந்த்₃ரனல்லன் ; ஜக₃த்காரண பூ₄தனை பரமாத்மா என்று நிர்ணயிக்கப்பட்டது. இனி ''இலனது உடையனிதென நினைவரியவன்'' என்று - தூ₃ரஸ்த₂மாயிருப்பது ஒன்றைக்காட்டி அத்தையுடையனல்லன், ஸந்நிஹிதமாயிருப்பதொன்றைக்காட்டி இத்தையுடையவன் என்று நினைக்கவுங்கூட அரியனென்று சொல்லி, ''நிலனிடை விசும்பிடை உருவினன்'' என்று - பூ₄ம்யந்தரிக்ஷாதி₃ ஸர்வதே₃ஶவர்த்திகளான ஸர்வசேதநாசேதநங்களையும உடையவனென்று அருளிச்செய்கையாலே, 3. **''ஸர்வாணி ஹவா இமாநி பூ₄தாநி ஆகாஶாதே₃வ ஸமுத்பத்₃யந்தே, ஆகாஶம் ப்ரத்யஸ்தம் யந்தி''** 4. **''ஸர்வாணி ஹவா இமாநி பூ₄தாநி ப்ராணமேவாபி₄ஸம்விஶந்தி''** 5. **''பாதே₃ாऽஸ்ய ஸர்வா பூ₄தாநி''** இத்யாதி₃விஷயவாக்யங்களிலுள்ள ப்ரஸித்₃த₄ாகாஶ ப்ராண ஜ்யோதிஸ்ஸூகளுககு க₄டியாதபடியான நிகி₂லசேதநாசேதநகாரணத்வ ப்ரகாரித்வாதி₃களை இவரும வெளியிட்டருளினர்.

''உருவினன் அருவினன்''என்று சித₃சித்துக்களுக்கு ஶேஷியென்று அர்த்த₂மாமொழிய ப்ரபஞ்சகாரணத்வம் அர்த்த₂மன்றே என்னில்; கார்யத்வமுமதச்சே₂ஷத்வ ப்ரகாரமாகையாலே ஶேஷத்வகத₂நத்தாலே ஜக₃த்துக்கும் ப்₃ரஹ்மகார்யத்வம் ஸித்₃தி₄க்குமென்று உபஸர்ஜநத்வரூப ஶேஷத்வத்தை அருளிச்செய்தார். ஆனுல் கார்யகாரண பா₄வேந சொல்லாமல் ஸம்ப₃ந்த₄ஸாமாந்யாவலம்ப₃நம் பண்ணுவானென்னென்னில் ; 5. **''பாதே₃ாऽஸ்ய ஸர்வா பூ₄தாநி''** என்று ஜ்யோதிரதி₄கரணேக்தமான ஜக₃ச்சே₂ஷித்வமும் ஸங்க்₃ருஹீதமாகவேணுமென்னும் கருத்தாலே அருளிச்செய்தார் ; ஆகையால் இவ்வதி₄கரண த்ரயத்துக்கும் இச்சந்தைக்கும் ஸமாநார்த்த₂த்வம் ஸித்₃த₄ம். '' அங்கலனுடையொருவனை '' என்று - அந்த ஆநந்த₃கு₃ணத்தையுடைய அத்₃விதீயனென்கையாலே, 2. **''ஸ ஏஷ ப்ராண ஏவ ப்ரஜ்ஞாத்மாऽऽநந்தே₃ாऽஜரோऽம்ருத:''** என்று இந்த்₃ரப்ராணஶப்₃த₃நிர்தி₃ஷ்டனுக்கு ஆநந்த₃-அஜர-அம்ருத ஶப்₃த₃ஸாமாநாதி₄கரண்யத்தாலே பரமாத்மத்வத்தை ஸாதி₄த்த அர்த்த₂ம் இச்சந்தையிலே ஸூசிதமாகையாலே, இச்சந்தை இந்த்₃ரப்ராணுதி₄கரணர்த்த₂மாகலாம். கிஞ்ச ''நணுகினம் நாமே''-''நாம் ப்ராபிக்கப் பெற்ருேம்'' என்று உபாஸந ப₂லமான ப்ராப்யத்வ கத₂நமுகே₂ந பரமாத்மாவினுடைய உபாஸ்யத்வத்தை ஸூசிப்பிக்கையாலே' 6. **''தம்மாமாயுரம்ருதமித்யுபாஸ்வ''** என்கிற இந்த்₃ரப்ராணஶப்₃த₃வாச்யனுக்குப் பரமாத்மத்வஸாத₄கமான

உபாஸ்யத்வப்ரதிபாதகவாக்ய ஸமாநார்த்தகம் இச்சந்தை என்று அறியலாம். இப்படி மூன்றும்பாட்டும அந்நாலதிகரணமும் ஏககண்டமென்னுமிடம் ஸித்தம்.

**1. ஆம்நாயமௌளியுகளீவிஹாராணும் ஸதாம் முதே।**
**நிரூபிதாऽऽத்யபாதஸ்ய கதாத்ரயஸமார்த்ததா ॥**

**இதி ஆத்யபாதகாதாத்ரயைககண்ட்யம்.**

இப்படி மூன்று பாட்டுககும ப்ரதமபாதத்துக்கும ஐகார்த்யம் உபபாதிதமாயிற்று. இனிமேல, நாலாமபாட்டு தொடங்கி மேல்மூன்று பாட்டுக்கும் த்ரிபாதிக்கும ஐகார்த்யம உபபாதிககபபடுகிறது; அதில முதலிலே த்விதீய பாதமும் நாலாம்பாடடும ஏககண்டமானபடியை உபபாதிககிறோம். த்விதீய பாதத்துக்குப பொருளான ஜகச்சரீரதவததை இப்பாட்டிலும் ஆழ்வாரருளிச் செயகையாலே ஐகார்த்யமுண்டு. த்விதீயபாதார்த்தம் ஜகச்சரீரகத்வம என்னுமிடத்தை 2. **"த்விதீயே ஜகச்சரீரகத்வம்"** என்று ஶ்ருதப்ரகாஶிகையிலும, 3. **"ஸ்ரஷ்டா தேஹீ ஸ்வநிஷ்டோ நிரவதிமஹிமா"** என்று ப்ரதமாத்யாயபாத சதுஷ்டயத்துக்கும் அடைவே பொருள் சொலலுமிடத்தில், த்விதீயபாதத்தின் பொருளை "தேஹீ" என்று ஸாராவளியிலும், ஸ்ரீமத்ஸுதர்ஶநபட்டரும் ஸ்ரீமத் வேங்கடநாதரும வகுத்து அருளிச்செய்தார்கள்.

இனி, த்விதீயபாத ப்ரதமாதிகரணத்திலே—4. **"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத"** என்கிற ஶாண்டில்ய வித்யாவாக்யத்தில் உபதிஷ்டமான ப்ரஹ்மம் ஜீவனாகவேணும; நிர்துஷ்டனான பரமாத்மாவுக்கு ஹேயாகரமான சிதசித்ரூப ஸர்வபாவம் கூடாமையாலும், தேவமநுஷ்யாதிரூபேண கர்மக்ருதமாக ஜீவனுக்கு ஸர்வாத்மபாவம் கூடுகையாலும் – என்று பூர்வபக்ஷம் வருமளவில், ஸர்வவேதாந்த ப்ரஸித்தமான ஸர்வஜகத்காரணத்வத்தை உபதேஶிக்கையாலும, தஜ்ஜத்வ தலலத்வ ததந்த்வங்களாலே ப்ரஹ்மத்துக்கே தாதாத்ம்யம் உபபந்நமாகையாலும், தேவமநுஷ்யாதிபாவேந ஜீவனுக்குத் தாதாத்ம்யம் உண்டானாலும் அவனுக்கு ஜகதகாரணத்வம் கூடாமையாலும், ப்ரஹ்ம ஶப்தவாச்யன் ஜீவனல்லன், ஸர்வஜகச்சரீரதயா ஸர்வஶப்த வாச்யனான பரமாத்மாவே என்று ஸித்தாந்திக்கப்பட்டது.

த்விதீயாதிகரணத்திலே—5. **"யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:। ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம்"** இத்யாதி கடவல்லீ வாக்யத்தில் ஓதநோபஸேசந ஸூசிதனான அத்தா ஜீவனாகவேணும; போக்த்ருத்வம் கர்மநிமித்தமாகையாலும், ஜீவனுக்கே அது உள்ளதொன்றாகையாலும்–என்று பூர்வபக்ஷம் வருமளவில்; சராசர ரூப க்ருத்ஸ்ந ஜகத்த்ருத்வம் ஜகத்ஸம்ஹார கர்த்ருத்வமொழிய கர்மநிமித்த போக்த்ருத்வமலலாமையாலும், தாத்ருஶஸம்ஹாரகர்த்ருத்வம் பரமாத்ம தர்மமாகையாலும் இவ்வாக்யப்ரதிபாத்யன் ஜீவனலலன், பரமாத்மாவே என்று ஸித்தாந்திக்கப்பட்டது.

த்ருதீயாதி₄கரணத்தில் — 1. "ய ஏஷோऽந்தரக்ஷிணி புருஷோ த்₃ருஶ்யதே" என்கிற ச₂ாந்தோ₃க்₃யத்தில் அக்ஷ்யாத₄ாரதயா நிர்தி₃ஷ்டனான புருஷன் ப்ரதி பி₃ம்ப₃ ஜீவ தே₃வதாவிஶேஷங்களில் அந்யதமனாகவேணும்; ப்ரஸித்₃த₄வந்நிர்தே₃ ஶத்தாலும், "த்₃ருஶ்யதே" இத்யபரோக்ஷாபி₄த₄ாநத்தாலும் ப்ரதிபி₃மப₃மாகலாம்; ஜீவனுக்குச் சக்ஷுஸ்ஸிலே விஶேஷ ஸந்நித₄ாநமுண்டாகையாலே ஜீவன்தான் ஆகலாம். 2. "ரஶ்மிபி₄ரேஷோऽஸ்மிந் ப்ரதிஷ்டி₂த:" என்கிற ஶ்ருதிப்ரஸித்₃தி₄யாலே சக்ஷு: ப்ரதிஷ்டி₂ததே₃வதாவிஶேஷந்தானாகலாம் - என்று பூர்வபக்ஷம் வருமளவில்; 3. "ஏஷ ஆத்மேதி ஹோவாச ஏதத₃ம்ருதமப₄யமேதத்₃ ப்₃ரஹ்மேத்யாசக்ஷதே" இத்₃ யாதி₃ வாக்யத்தால் ப்ரதிபந்நமான கல்யாணகு₃ணங்கள் பரமாத்மாவுக்கேயுள்ள தொன்றாகையாலும், 4. "யஶ்சக்ஷுஷி திஷ்ட₂ந்" இத்யாதி₃ ஶ்ருதிப்ரஸித்₃த₄மான சக்ஷுர்வர்த்தித்வத்தை 1. "ஏஷோऽக்ஷிணி" என்று ப்ரஸித்₃த₄வந்நிர்தே₃ஶிக்கை யாலும், 1. "த்₃ருஶ்யதே" இத்யபரோக்ஷாபி₄த₄ாநம் யோகி₃த்₃ருஶ்யத்வாபி₄ப்ராய மாகையாலும் ப்ரதிபி₃ம்ப₃ாதி₃களுக்கு நியமேந சக்ஷுர்வர்த்தித்வம் இல்லாமை யாலும், அக்ஷிபுருஷன் ப்ரதிபி₃ம்ப₃ாதி₃களில் அந்யதமனல்லன், பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

சதுர்த்த₂ாதி₄கரணத்தில்—5. "ய: ப்ருதி₂வ்யாம் திஷ்ட₂ந், ப்ருதி₂வ்யா அந்தரோ யம் ப்ருதி₂வீ ந வேத₃, யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம்" இத்யாதி₃வாஜஸநேயக வாக்யஶ்ருதனான அந்தர்யாமி ஜீவனாகவேணும்; வாக்ய ஶேஷத்திலே கரணாயத்தஜ்ஞாநம் அந்தர்யா மிக்கு ஶ்ருதமாகையாலே-என்று பூர்வபக்ஷம் வருமளவில்; ஒருவனே ஸர்வலோக ஸர்வபூ₄த ஸர்வதே₃வாதி₃களையும் நியமிக்கிறானென்கிற இது பரமாத்மாऽஸாத₄ாரண த₄ர்மமாகையாலும், 6. "த்₃ரஷ்டா ஶ்ரோதா" என்று ரூபாதி₃ஸாக்ஷாத்காரத்தைச் சொல்லுகிறதொழிய கரணாயத்த ஜ்ஞாநவத்த்வத்தைச் சொன்னதல்லாமையாலும் அந்தர்யாமி ஜீவனல்லன், பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

ஐந்தாமதி₄கரணத்தில் — 7. "யத்தத₃த்₃ரேஶ்யமக்₃ராஹ்யம்" இத்யாதி₃வாக்யத் திலும் 8. "அக்ஷராத் பரத: பர:" என்கிற வாக்யத்திலும் ப்ரதிபந்நமான அத்₃ருஶ்யத் வாதி₃கு₃ணகமும், அக்ஷராத் பரத:பரனும் ப்ரக்ருதி புருஷர்களாகவேணும்; அசேதந ப்ருதி₂வ்யாதி₃கு₃தமான த்₃ருஶ்யத்வாதி₃ ப்ரதிஷேத₄ம் தத்ஸஜாதீய ப்ரத₄ாநத்தில் உசிதமாகையாலும், அதிற்காட்டில் பரத்வம் ஜீவனுக்கு உசித மாகையாலும் – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; 9. "யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்₃" இத்யாதி₃ வாக்யங்களில் அத்₃ருஶ்யத்வாதி₃ கு₃ணகவஸ்துவுக்கு ஸர்வஜ்ஞத்வாதி₃ கு₃ணங்கள் ஶ்ருதமாகையாலும், அதிற்காட்டில் பரதவம் ஜீவனுக்கு க₄டியாமை யாலும் இவ்விரண்டு வாக்யத்திலும் ப்ரக்ருதி புருஷர்கள் ப்ரதிபாத்₃யரல்லர், பரமாத்மாவே ப்ரதிபாத்₃யனென்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

ஷஷ்ட₂ாதி₄கரணத்தில் — 1. **"ஆத்மாநமேவேமம் வைஶ்வாநரம் ஸம்ப்ரத்யத்₄யேஷி"** இத்யாதி₃ வாக்யத்தில ஶ்ருதனான வைஶ்வாநரன் பரமாத்மா என்று நிர்ணயிக்கவொண்ணாது ; வைஶ்வாநர ஶப்₃த₃த்தை ஜாட₂ராக்₃நியென்ன, பூ₄த த்ருதீயமென்ன, தே₃வதாவிஶேஷமென்ன, இவைகளிலும் பரமாத்மாவிலும் வேத₃ம ப்ரயோகி₃க்கையாலே - என்று பூர்வபக்ஷம் வருமளவில்; 2. **"கோ ந ஆத்மா கிம் ப்₃ரஹ்ம"** என்று உபகரமத்திலே ஸர்வாத்மபூ₄தபரப்₃ரஹ்மஜிஜ்ஞாஸயா உபஸந்நரான ஔபமந்யவாதி₃ முமுக்ஷுக்களைக் குறித்து உபதே₃ஶிக்கப்படுகையாலும், பரமாத்மத₄ர்மமான த்₃யுப்ரப்₄ருதி ப்ருதி₂வ்யந்த ஜக₃ச்ச₂ரீரத்வம் ஶ்ருதமாகையாலும், ஜாட₂ராக்₃ந்யாதி₃களில் இஶ்ஶப்₃த₃ ப்ரயோக₃முண்டானாலும் இவ்விடத்தில வைஶ்வாநரன் பரமாத்மாவே என்று நிர்ணயிக்கப்பட்டது.

இப்பாத₃ார்த்த₂மான ஜக₃ச்ச₂ரீரத்வம் ப்ரத₂மாதி₄கரணத்திலே 3, **"ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம"** என்கிற விஷயவாக்யத்திலே காணலாம். த்₃விதீயாதி₄கரணத்தில் — 4. **"கு₃ஹாம் ப்ரவிஷ்டௌ"** இத்யாதி₃ ஸூத்ர விஷயமான 5. **தம் து₃ர்த₃ர்ஶம் கூ₃ட₄மநுப்ரவிஷ்டம் கு₃ஹாஹிதம் க₃ஹ்வரேஷ்ட₂ம் புராணம்"** இத்யாதி₃ வாக்யத்திலே ஸௌப₄ரியைப்போலே ஜக₃த்து ஜ்ஞாநாதி₄ஷ்டி₂த ஶரீரமன்று, ஸ்வரூபத்தாலே ஸர்வஶரீரங்களிலே ஹ்ருத₃ய கு₃ஹாப்ரவிஷ்டனான பரமாத்மாவுக்கு ஶரீரம் என்று சொல்லப்பட்டது. த்ருதீயாதி₄கரணத்தில், 6. **"ய ஏஷோऽக்ஷிணி புருஷோ த்₃ருஶ்யதே"** என்கிற விஷயவாக்யத்திலே இந்த்₃ரியங்களுக்கும் பரமாத்மஶரீரத்வம் சொல்லப்பட்டது. சதுர்த்த₂ாதி₄கரணத்தில், கேவலம் இந்த்₃ரியங்களேயல்ல, ப்ரத்யேகம் ஸர்வதத்வங்களும் பரமாத்மஶரீரமென்று சொல்லப்பட்டது. பஞ்சமாதி₄கரணத்தில், ஸர்வதத்வங்களும் ஸமுதா₃ய ரூபத்தாலும் ப்₃ரஹ்மஶரீரமென்று 7. **"ரூபோபந்யாஸாத்"** என்கிற ஸூத்ரத்திலே சொல்லப்பட்டது. ஷஷ்ட₂ாதி₄கரணத்தில், ஜக₃ச்ச₂ரீரத்வம் முமுக்ஷூபாஸ்யம் என்று ப்ரபஞ்சிதம்.

இப்படி ஷட₃தி₄கரணியான இப்பாத₃த்தில் சொல்லப்பட்ட ஜக₃ச்ச₂ரீரத்வத்தை ஆழ்வாரும் "நாமவனிவனுவன் அவளிவளுவளெவள், தாமவரிவருவர் அது விது வுதுவெது, வீமவையிவையுவை அவைநலந்தீங்கவை, ஆமவையாயவை ஆய்நின்ற அவரே" என்று-"தந்தாமாயும், அஸந்நிஹிதனையும், ஸந்நிஹிதனையும், அதூ₃ர விப்ரக்ருஷ்டனையுமிருந்துள்ள புருஷனென்ன, தூ₃ரவர்த்திநியாயும், ஸந்நிஹிதையாயும், அதூ₃ர விப்ரக்ருஷ்டையாயும் வினவப்படுகிறவளாயுமிருந்துள்ள ஸ்த்ரீஜாதியென்ன, ப₃ஹுமந்தவ்யரில் அவரென்றும், இவரென்றும், உவரென்றும் சொல்லப்படுகிறவர்களென்ன, "அது இது உது எது" என்று நபும்ஸகலிங்க₃ நிர்தி₃ஷ்டமான வஸ்துக்களென்ன, நஶ்வரபதா₃ர்த்த₂ங்களென்ன, நல்லதாயும் தீயதாயும் இருந்துள்ள வஸ்துக்களென்ன இவை இத்தனையுமாய், காலத்ரயவர்த்தியான பதா₃ர்த்த₂ங்களுமாய் இருக்கிற பூர்வோக்தரானவர்" என்று ஸாமாநாதி₄கரண்யத்தாலே

ஜக₃த்துக்கும் ப்₃ரஹ்மத்துக்கும் உண்டான ஶரீராத்மபா₄வத்தை அருளிச்செய்கை யாலே இப்பாட்டுக்கு த₃விதீயபாத₃த்தோடு ஐககண்ட்₂யம் உண்டென்னுமிடம் ஸுஸ்பஷ்டம்.

"அவரவர் தமதமது" என்கிற ஐந்தாம்பாட்டுக்கு த்ருதீயபாதைகார்த்₂யம் உண்டானபடியென்? என்னில்; த்ருதீயபாத₃த்தில் ப்ரதிபாத்₃யமான ஸர்வாத்மத்வ ப்ரகாரத்தை இதிலும் அருளிச்செய்கையாலே ஐகார்த்₂யமுண்டு. இப்பா த₃ார்த்த₂ம் ஸர்வாத்மத்வப்ரகாரமென்னுமிடத்தை 1. **"த்ருதீயே ஸர்வாத்மத்வப்ரகார:"** என்று ஶ்ருதப்ரகாஶிகைபிலே ப₄ட்டர் அருளிச்செய்தார்.

இப்பாத₃த்தில் ப்ரத₂மாதி₄கரணத்திலே — 2. **"யஸ்மிந் த்₃யௌ: ப்ருதி₂வீ சாந்தரிக்ஷமோதம் மநஸ் ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை:"** இத்யாத்₃யாத₂ர்வணிக வாக்யத்தில் ஶ்ருதனை த்₃யுப்₄வாத்₃யாயதநன் ஜீவனாகவேணும். மந:ப்ராண ஸப்ப₃ந்த₄ நாட்₃யாத₄ரத்வ ப₃ஹுதா₄ஜாயமாநத்வாதி₃களாலே – என்று பூர்வபக்ஷம் வருமள வில்; அம்ருதஸேதுத்வ ஆத்மத்வ ஸர்வஜ்ஞத்வாதி₃ த₄ர்மவாசக பரமாத்மாஸாதா₄ ரண ஶப்₃த₃ங்களாலே நிர்தே₃ஶிக்கையாலும், ஸர்வாதா₄ரனுக்கு மந:ப்ராணநாட்₃யா தா₄ரத்வம் கூடுகையாலும், ஐச்ச₂மான ப₃ஹுதா₄ஜாயமாநத்வம் இவனுக்கும் உண்டாகையாலும், த்₃யுப்₄வாத்₃யாயதனன் ஜீவனல்லன், பரமாத்மாவே என்று ஸித்₃தா₄ந்திக்கப்பட்டது.

த்₃விதீயாதி₄கரணத்தில்—3. **"யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யச் ச்₂ருணோதி நாந்யத்₃ விஜாநாதி ஸ பூ₄மா"** என்கிற ச₂ாந்தோ₃க்₃ய வாக்யத்தில் ஶ்ருதனை பூ₄மகு₃ண விஶிஷ்டன் ஜீவனாகவேணும்; 4. **"தரதி ஶோகமாத்மவித்"** என்று ஆத்மஜிஜ்ஞா ஸயா உபஸந்நனை முமுக்ஷுவுக்கு ப்ராணஸஹசாரித்வ நிப₃ந்த₄நேந ப்ராணஶப்₃த₃ நிர்தி₃ஷ்டனை ஜீவனிடத்தில் ஆத்மோபதே₃ஶம் ஸமாப்தமாகையாலும், அந்த ஜீவனுடைய முக்தாவஸ்தை₂யில் ஆநந்த₃ வைபுல்யத்தை பூ₄மஶப்₃த₃த்தாலே நிர்தே₃ஶிக்கையாலும் – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; 5. **"யஸ் ஸத்யேநாதிவத₃தி"** என்கிற வாக்யத்தில் ஸத்ய ஶப்₃த₃த்தாலே ஶ்ருதனை பரமாத்மாவினிடத்தில் ஆத்மோபதே₃ஶம் ஸமாப்தமொழிய ப்ராணஶப்₃த₃வாச்ய ஜீவோபதே₃ஶத்தில் ஸமாப்தமல்லாமையாலும், பரமாத்மாவினுடைய ஆநந்த₃வைபுல்யத்தை பூ₄ம ஶப்₃த₃த்தாலே சொல்லுகையாலும், பூ₄மகு₃ண விஶிஷ்டன் ஜீவனல்லன், பர மாத்மாவே என்று ஸித்₃தா₄ந்திக்கப்பட்டது.

த்ருதீயாதி₄கரணத்தில் — 6. **"ஏதத்₃வை தத₃க்ஷரம் கா₃ர்கி₃ ப்₃ராஹ்மணா அபி₄ வத₃ந்தி"** இத்யாதி₃ வாஜஸநேய வாக்யத்தில் ஶ்ருதமான அக்ஷரம், ப்ரதா₄ந ஜீவர்க ளாகவேணும்; 7. **"அக்ஷராத் பரத: பர:"** 8. **"அக்ஷரம் தமஸி லீயதே"** இத்யாதி₃ ஶ்ருதிகளில் ப்ரதா₄நஜீவர்களிலும் அக்ஷரஶப்₃த₃ ப்ரயோக₃ம் காண்கையாலே – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; த்ரைகால்யவர்த்தி விகாரஜாததா₄ரபூ₄த ஆகாஶ

ஶப்₃த₃வாச்ய ப்ரத₄ாநாத₄ாரத்வத்தாலும், ப்ரஶாஸந ஶ்ரவணத்தாலும் அக்ஷர ஶப்₃த₃நிர்தி₃ஷ்டம் ப்ரத₄ாநமுமன்று, ஜீவனுமன்று, பரமாத்மாவேயென்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

சதுர்த்த₂ாதி₄கரணத்தில் — 1. **"பரம் புருஷமபி₄த்₄யாயீத"** என்று தொடங்கி **2. "புரிஶயம் புருஷமீக்ஷதே"** என்கிற வாக்யத்தில் த்₄யாயதீக்ஷதிகர்மதயா நிர்தி₃ஷ்டனுன பரமபுருஷன் சதுர்முக₂னுகவேணும்; மநுஷ்யலோகத்துக்கும் அந்தரிக்ஷலோகத்துக்கும் உபரிதநமான ப்₃ரஹ்மலோகத்தில் ஈக்ஷணீயத்வாதி₃லிங்க₃ததாலே – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; **3. "யத்தச்ச₂ாந்தமஜரமம்ருதமப₄யம்"** இத்யாதி₃ வாக்யத்தில் ஶாந்தத்வாஜரத்வாம்ருதத்வாதி₃ த₄ர்மங்கள் ஶ்ருதமாகையாலும், ஸர்வபாபநிர்முக்தனுன முக்தனுக்கு ப்ராப்யதயா உக்தமான ப்₃ரஹ்மலோகம் சதுர்முக₂ஸ்த₂ாநமல்லாமையாலும், **4. "யத்தத் கவயோ வேத₃யந்தே"** என்று கவிஶப்₃த₃வாச்யரான நித்யஸூரிகளாலே த்₃ருஶ்யமான வைஷ்ணவபத₃த்தை ப்₃ரஹ்மலோக ஶப்₃த₃த்தாலே நிர்தே₃ஶிக்கையாலும் தத்ரத்யனுனவன் சதுர்முக₂னல்லன், பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

பஞ்சமாதி₄கரணத்தில் — **5. "த₃ஹரோऽஸ்மிந்நந்தர ஆகாஶ:"** இத்யாதி₃ ச₂ாந்தோ₃க்₃ய வாக்ய ஶ்ருதமான ஹ்ருத₃யபுண்ட₃ரீக மத்₄யவர்த்தித₃ஹராகாஶம் பூ₄தாகாஶமாதல், ஜீவனுதலாகவேணும்; பூ₄தாகாஶத்தில் ஆகாஶஶப்₃த₃ப்ரஸித்₃தி₄ ப்ராசுர்யத்தாலே பூ₄தாகாஶமாகலாம்; ப்ரஜாபதி வாக்யத்தில் ஜீவனுக்கும் அபஹதபாப்மத்வாதி₃கள் ஶ்ருதமாகையாலும், ப்ரகாஶாதி₃யோக₃த்தாலே ஆகாஶ ஶப்₃த₃ம் ஜீவனிடத்தில் கூடுகையாலும் ஜீவன்தானுகலாம் – என்று பூர்வபக்ஷம வருமளவில்; அபஹதபாப்மத்வாதி₃கள் பூ₄தாகாஶத்துக்கு க₄டியாமையாலும், ப்ரஜாபதிவாக்யத்தில் ஶ்ருதமான பரமாத்மஸம்பத்திலப்₃த₄ாபஹதபாப்மத்வாதி₃கள் ஜீவனுக்கு உண்டானுலும், த₃ஹரவாக்யோக்த அதிரோஹித நித்யஸித்₃த₄ அபஹதபாப்மத்வாதி₃ வைஶிஷ்ட்யம் ஜீவனுக்குக் கூடாமையாலும், பரமாத்மாவினிடத்திலும ஆகாஶ ஶப்₃த₃ப்ரயோக₃ம் ஶ்ருத்யந்தர ஸித்₃த₄மாகையாலும் த₃ஹராகாஶம் ப்ரஸித்₃த₄ாகாஶமுமன்று, ஜீவனுமன்று, பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

ஷஷ்ட₂ாதி₄கரணத்தில் — **6. "அங்கு₃ஷ்ட₂மாத்ர: புருஷோ மத்₄ய ஆத்மநி திஷ்ட₂தி"** இத்யாதி₃ கட₂வல்லீ வாக்யத்தில் ஶ்ருதனுன அங்கு₃ஷ்ட₂ ப்ரமிதன் ஜீவனுகவேணும். அங்கு₃ஷ்ட₂ ப்ரமிதத்வம் ஜீவனுக்கு ஶ்ருத்யந்தர ஸித்₃த₄மாகையாலே – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; பூ₄தப₄வ்யேஶாநத்வம் ஜீவனுக்கு அநுபபந்நமாகையாலும், பரமாத்மாவுக்கே உள்ளதொன்ருகையாலும் அங்கு₃ஷ்ட₂ ப்ரமிதன் ஜீவனல்லன், பரமாத்மாவே என்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது. ஸப்தமாஷ்டமநவமாதி₄கரணங்களில் ப்₃ரஹ்மவித்₃யையிலே அதி₄காராநதி₄கார விசாரம் ப்ராஸங்கி₃கமாக ப்ரவ்ருத்தமாயிற்று.

த₃ஶமாதி₄கரணத்தில் — 1. "ஆகாஶோ ஹவை'. நாமரூபயோர் நிர்வஹிதா" இத்யாதி₃ சா₂ந்தோ₃க்₃ய வாக்யத்தில் ஶ்ருதனான ஆகாஶஶப்₃த₃வாச்யன் முக்தாத்மாவாகவேணும்; 2. "அஶ்வ இவ ரோமாணி விதூ₄ய பாபம்" இத்யாத்₃யநந்தர வாக்யத்திலே முக்தன் ப்ரக்ருதனுகையாலும், முக்தனுக்கும் பூர்வாவஸ்தை₂யிலே கர்ம க்ருதமாந நாமரூபநிர்வாஹம் கூடுகையாலும் – என்று பூர்வபக்ஷம் வருமளவில்; ஸகலஜக₃ந்நிர்மாண து₄ரந்த₄ரனான பரமாத்மாவுக்கே நாமரூப நிர்வோட்₄ருத்வம் ஶ்ருதிஶதஸமதி₄க₃தமாகையாலும், 3. "ப்₃ரஹ்மலோகமபி₄ஸம்ப₄வாநி" என்று ப்₃ரஹ்ம லோக ஶப்₃த₃வாச்யனான பரமாத்மாவும் அநந்தரப்ரக்ருதனுகையாலும் ஆகாஶ ஶப்₃த₃ நிர்தி₃ஷ்டன் முக்தனல்லன், பரமாத்மாவேயென்று ஸித்₃தா₄ந்திக்கப்பட்டது.

ஸர்வாத்மத்வப்ரகாரத்தில் ஹேயாஸ்ப்ருஷ்டத்வம் ப்ரத₂மாதி₄கரணோக்தம். த்₃விதீயாதி₄கரணத்தில் நிரதிஶயாநந்த₃யோக₃ம் சொல்லப்பட்டது; இதுவும் ஸர்வாத்மத்வ ப்ரகாரமிறே. த்ருதீயாதி₄கரணத்தில் ப்ரஶாஸித்ருத்வம் ப்ரபஞ்சிதம்; இது ஸர்வாத்மத்வப்ரகாரமென்னுமிடம் ஸ்பு₂டமிறே. சதுர்த்த₂ாதி₄கரணத்தில் முக்த ப்ராப்யத்வம் நிரூபிதம்; இதுவும் 4. "ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி" இத்யாதி₃ப் படியே ஸர்வஶரீரியான ப்₃ரஹ்மமே முக்தப்ராப்யமாகையாலே ஸர்வாத்மத்வ ப்ரகாரமென்னக் குறையில்லை. பஞ்சமாதி₄கரணத்தில் நிரதிஶயபோ₄க்₃ய கு₃ணத்வம் நிரூபிதம்; இதுவும் அபஹதபாப்மத்வாதி₃ கு₃ணவத்த்வமாகையாலே ஸர்வாத்மத்வ ப்ரகாரமென்னலாம். ஷஷ்ட₂ாதி₄கரணத்தில் மாதாவைப்போலே அந்தர்வர்த்தியான எம்பெருமானுக்கு ஜுகு₃ப்ஸை இல்லாமையும் பிதாவைப்போலே ஶிக்ஷகத்வோ பா₄ய ஹேதுத்வமும் சொல்லிற்று; இதுவும் அந்தர்யாமித்வ ப்ரகாரமென்னுமிடம் ஸித்₃த₄ம். அதி₄காராநதி₄கார விசாராத்மக அதி₄கரணத்ரயமும் ப்ராஸங்கி₃கமாகையாலே இதில் ஸர்வாத்மத்வப்ரகார ப்ரதிபாத₃நம் பண்ணவேணுமென்கிற நிர்ப₃ந்த₄மில்லை. சரமாதி₄கரணத்தில் ஸுஷுப்த்யாதி₃ ஸர்வாவஸ்தை₂களிலும் பரமாத்ம ஸம்ப₃ந்த₄ம் ப்ரோக்தம். இதுவும் ஸர்வாத்மத்வப்ரகாரமென்னுமிடம் ஸ்பஷ்டமிறே.

இப்படி த்ருதீயபாத₃த்தாலே நிரூபிதமான ஸர்வாத்மத்வ ப்ரகாரத்தை "அவரவர் தமதமதறிவறிவகைவகை, அவரவரிறையவரென அடியடைவர்கள், அவரவரிறையவர் குறைவிலரிறையவர், அவரவர் விதிவழி அடையநின்றனரே"— தத்தத₃தி₄காரிகள் தந்தாமுடைய ருசிபே₄த₃த்தாலே ராஜஸராயும் தாமஸராயும் மிஶ்ரஸத்வராயுமிருந்துள்ள தே₃வதைகளை ஆஶ்ரயிப்பார்கள். அந்தந்த தே₃வதைகளை ஆஶ்ரயித்தவர்களுக்கு அத்₃தே₃வதைகள் தத்தத்ப₂ல ப்ரதா₃நத்தில் குறையுடையரல்லர்; அதுக்கு அடி ஸர்வஶரீரியான ஸர்வேஶ்வரன் தத்தத்₃தே₃வதைகளுக்கு அந்தர்யாமியாய், ஆஶ்ரயித்த மநுஷ்யர்க்கு, தத்தத் ப₂லம் பெறும்படி இருக்கையாலே — என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார்; அதில் பாத₃ார்த்த₂மான ஸர்வாத்மத்வ ப்ரகாரத்தில் ப்ரத₂மாதி₄கரணப்ரமேயமான ஹேயாஸ்ப்ருஷ்டத்வ

ரூபப்ரகாரத்தை "இறையவர்" என்கிற பத₃த்தாலே ப்ரகாஶிப்பித்தருளினர்; அது எங்ஙனே யென்னில்: "இறையவர்" என்று - ஈஶ்வரத்வம் சொல்லுகையாலே ஸகல ஹேயாஸ்ப்ருஷ்டனென்று ஸித்₃தி₄க்கும்; த்₃விதீயாதி₄கரண ப்ரமேயமான நிரதிஶயா நந்த₃யோக₃ம் ஶேஷித்வவாசியான அந்தப் பத₃த்தாலேதானே ஸூசிதம்; ஸர்வ ஶேஷிக்கிறே நிரதிஶயாநந்த₃த்வமுள்ளது; ஆகையாலிறே ஆநந்த₃வல்லியிலே **1. "தஸ்யேயம் ப்ருதி₂வீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணா ஸ்யாத்"** இத்யாரப்₄ய, வித்தபூர்ணை யான ஸர்வப்ருதி₂வியுமுடையனாயிருக்கையை மநுஷ்யாநந்த₃மாகச் சொல் லிற்று. இனி ஸர்வத்தையும் உடையவனென்று சொல்லவே, ஸர்வஶேஷித்வ ப்ரயுக்த நிரதிஶயாநந்த₃ யோக₃மும் தன்னடையே வ்ரும். த்ருதீயாதி₄கரண ப்ரமேயமான ப்ரஶாஸித்ருத்வமும் நியந்த்ருரூப ஶேஷிவாசியாகையாலே அப் பத₃த்தாலேதானே ஸூசிதம். இன்னமும் "அவரவர் விதிவழி யடையநின்றனர்" என்று–தே₃வதாந்தர்யாமித்வகத₂ந முக₂த்தாலும் ப்ரஶாஸித்ருத்வம் உக்தமாகலாம்; சதுர்த்த₂ாதி₄கரண ப்ரமேயமான முக்தப்ராப்யத்வமும் " இறையவர் " என்று- இன்னானுக்கு இறையவரென்று விஶேஷியாதே ஸாமாந்யேந ஸர்வஶேஷியென்று சொல்லுகையாலே, இப்பத₃ததாலே சொல்லப்பட்டதென்றறியலாம். ஆகையா லிறே ப்ராப்யபரமான உத்தரவாக்யத்தில் நாராயணபத₃த்துக்கு ஶேஷித்வத்திலே நோக்கென்று முன்புள்ள முதலிகள் வ்யாக்₂யாநம் செய்தருளிற்று. இந்த "இறை யவர்" என்கிற பத₃ம் ஸாமாந்யேந ஸர்வஶேஷித்வவாசி என்னுமிடத்தை கலிவைரிதே₃ஶிகர் "பொதுவிலே 'இறையவர்' என்கிறர்; அவர்களோடு அவர்கள் ஆஶ்ரயிக்கிற தே₃வதைகளோடு தம்மோடு வாசியற எல்லார்க்குமொக்க இறையவ ராகையாலே" என்று ப₄க₃வத்₃விஷயத்திலே வெளியிட்டருளினர்.

பஞ்சமாதி₄கரண ப்ரமேயமான நிரதிஶய போ₄க்₃ய கு₃ணத்வமும் தே₃வ தாந்தர்யாமித்வ கத₂நத்தாலே ஸூசிதம்; அதெங்ஙனே யென்னில்: **2. "யாவாந் வா அயமாகாஶ:" 3. "உபே₄ அஸ்மிந் த்₃யாவாப்ருதி₂வீ - உப₄ாவக்₃நிஶ்ச வாயுஶ்ச ஸூர்யா சந்த்₃ரமஸாவுபெ₄ள வித்₃யுந்நக்ஷத்ராணி"** என்கிற வாக்யத்திலே ப்ரக்ருத த₃ஹ ராகாஶத்தை **3. "அஸ்மிந்"** என்று நிர்தே₃ஶித்து, அக்₃நிவாயு ஸூர்ய சந்த்₃ர வித்₃யுந்நக்ஷத்ராத்₃யாத₄ாரத்வத்தைச் சொல்லி, **4. "யச்சாஸ்யேஹாஸ்தி யச்ச நாஸ்தி ஸர்வம் தத₃ஸ்மிந் ஸமாஹிதம்"** என்று — பூர்வவாக்யோக்தமான ஸர்வாத₄ார த₃ஹராகாஶத்தை **3. "அஸ்மிந்"** என்று பராமர்ஶித்து, அந்த ப்₃ரஹ்மோபாஸ நம் பண்ணுகிறவனுக்கு இஹலோகலப்₄யமாயும், பரலோகலப்₄யமாயும், மநோ ரத₂மாத்ரவர்த்தியாயும் இருந்துள்ள ஸர்வபோ₄க்₃யஜாதமும் இந்த த₃ஹராகாஶத் திலே உண்டாயிருக்குமென்று சொல்லிற்று. இவ்விரண்டு வாக்யத்திலும் பூர்வ வாக்யத்திற்சொன்ன அக்₃நிவாயு ஸூர்ய சந்த்₃ர ப்ரப்₄ருதி ஸர்வாத₄ாரத்வ ரூபமான ஸர்வ ஶரீரத்வத்தை "இறையவரவரவர் விதிவழியடைய நின்ற னர்" என்று அருளிச்செய்கையாலே, தத₃வயவஹிதாநந்தரத்₃விதீய வாக்யத்

திற்சொன்ன ஸர்வாத₄ார வஸ்துவினுடைய நிரதிஶயபோ₄க்₃யத்வம் இச்சந்தை யாலே ஸூசிதமாகலாம்.

ஷஷ்ட₂ாதி₄கரணோக்தமான மாத்ருவத் ஜுகு₃ப்ஸாராஹித்யமும், பித்ருவத் ஶிக்ஷகத்வேந ப₄யஹேதுத்வமும், அந்தர்யாமித்வகத₂நத்தாலே தானே ஸித்₃தி₄க் கும். கிஞ்ச, தே₃வதாந்தர ஸமாஶ்ரயணம் பண்ணின அதிஹீநரையும் விடமாட் டாதே ஜுகு₃ப்ஸையற்று தத்தத்தே₃வதாமுகே₂ந ரக்ஷிப்பானென்று இச்சந்தை யால் அருளிச்செய்கையாலும், ஷஷ்ட₂ாதி₄கரண ப்ரமேயமிது என்றறியலாம்; அதி₄காராநதி₄கார விசாராத்மகமான ஸப்தமாஷ்டமநவமாதி₄கரண ப்ரமேயமும், "அவரவர் தமதமது" இத்யாதி₃யாலே அதி₄காரி வைவித்₄யகத₂நத்தாலே ஸூசிதம். த₃ஶமாதி₄கரணப்ரமேயமான ஸுஷுப்த்யாதி₃ ஸர்வாவஸ்த₂ாஸு அப்ரஹாணமும், ஸ்வேந ரூபேண நின்று ரக்ஷிக்குமளவுமன்றிக்கே தே₃வதாந்தரமுகே₂நவும் ரக்ஷித் தருளும் என்கிற இப்பாட்டாலே ஸூசிதமாகலாம்; இப்படி த்ருதீய பாத₃ார்த்த₂ மான ஸர்வாத்மத்வ ப்ரகாரத்தை இப்பாட்டாலே வெளியிடுகையாலே இப் பாட்டுக்கும் த்ருதீய பாத₃த்துக்கும் ஐகமத்யம் ஸித்₃த₄ம்.

சதுர்த்த₂பாத₃த்துக்கும் "நின்றனரிருந்தனர்" என்கிற ஆரும்பாட்டுக்கும் ஐகமத்யம் உண்டாம்படி எங்ஙனேயென்னில்; ஸர்வவஸ்துவும் ப்₃ரஹ்மகார்யமு மாய், ப்₃ரஹ்மஶரீரமுமாய், ப்₃ரஹ்மாத்மகமுமாயிருக்கையாலே, தத்கார்யமு மன்றிக்கே தச்ச₂ரீரமுமன்றிக்கே தத₃ாத்மகமுமன்றிக்கே இருக்கிற வஸ்து இல்லை யென்று அப்₃ரஹ்மாத்மக வஸ்து நிஷேத₄ம் இப்பாத₃ ப்ரதிபாத்₃யார்த்த₂மாயிருக்கும். இவ்வர்த்த₂த்தையே இப்பாட்டில் அருளிச்செய்கையாலே ஐகார்த்₂யமுண்டு. இப்பாத₃ார்த்த₂மிது என்னுமிடத்தை 1. **"அதத்கார்ய - அதச்ச₂ரீர - அதத₃ாத்மகவஸ்த்வ ஸம்ப₄வ: ப்ரதிபாத்₃யதே"** என்று ஶ்ருதப்ரகாஶிகையிலே ப₄ட்டர் அருளிச்செய் தார். இத்தை முக₂ாந்தரேண 2. **"நிரவதி₄மஹிமா"** என்று ஸாராவளியிலே வேத₃ாந்தாசார்யர் அருளிச்செய்தார்.

இதில் ப்ரத₂மாதி₄கரணத்திலே—ஜக₃த்தினுடைய அதத₃தீ₄நத்வம்–3. **"தத₃தீ₄ நத்வாத₃ர்த்த₂வத்"** என்கிற ஸூத்ரத்திலே ப்₃ரஹ்மாத்மகத்வம் ஜக₃த்துக்கு ஸாதி₄க் கையாலே நிரஸ்தமாயிற்று. த்₃விதீயாதி₄கரணத்தில்—4. **"அஜாமேகாம் லோஹித ஶுக்லக்ருஷ்ணாம்"** இத்யாதி₃ ஶ்வேதாஶ்வதரமந்த்ரத்தில் ஜக₃த்தினுடைய அப்₃ரஹ்மகார்யத்வம் தோற்றுகிறதென்று ஶங்கித்து, தைத்திரீயத்தில் 4. **"அஜா மேகாம்"** இத்யாதி₃ வாக்யாநுகு₃ண்யேந ப்₃ரஹ்மகார்யத்வத்தை ஸாதி₄த்து அதத்கார்யத்வத்தை நிரஸித்தார். த்ருதீயாதி₄கரணத்தில்—5. **"யஸ்மிந் பஞ்ச பஞ்ச- ஜநா:"** இத்யாதி₃ வாக்யங்களிற் சொல்லுகிறபடியே ஸாங்க்₂யப்ரக்ரியையாலே ஜக₃த்து அப்₃ரஹ்மாத்மகமென்று ஶங்கித்து, ப்₃ரஹ்மாத்மகத்வத்தை ஜக₃த்துக்கு ஸாதி₄த்து அதத₃ாத்மகத்வத்தை நிரஸித்தார். 6. **"தமேவம் மந்ய ஆத்மாநம்"**

என்றிறே அந்த ப்ரகரணத்தில் வாக்யம். சதுர்த்த₂ாதி₄கரணத்தில்—ஸத₃வ்யா க்ருதாதி₃ஶப்₃த₃த்தாலே ப்ரதிபந்நமான வஸ்துவுக்கு அதத₃ாத்மகத்வத்தை ஶங்கித்து, அதுவும் ப்₃ரஹ்மாத்மகமென்று பரிஹரித்து, ஜக₃த்தினுடைய அதத₃ாத் மகத்வத்தை நிரஸித்தார். பஞ்சமஷஷ்ட₂ாதி₄கரணங்களில், விஶேஷித்து சேதநன் அதத₃ாத்மகனென்று ஶங்கித்து, ப்₃ரஹ்மாத்மகத்வத்தை ஸாதி₄த்து, ஜீவனுடைய அதத₃ாத்மகத்வத்தை நிரஸித்தார். ஸப்தமாதி₄கரணத்திலே ஸேஶ்வரஸாங்க்₂ யோக்தமான ஜக₃த்தினுடைய அப்₃ரஹ்மாத்மகத்வத்தை ஶங்கித்து, ப்₃ரஹ்மோ பாத₃ாநத்வ ஸமர்த்த₂ந முகே₂ந ப்₃ரஹ்மாத்மகத்வத்தை ஸமர்த்தி₂த்து, அப்₃ரஹ் மாத்மகத்வத்தை நிரஸித்தார். அஷ்டமாதி₄கரணத்தில,ஸமர்த்தி₂த்த அர்த்த₂த்துக்கு ஸார்வத்ரிகத்வம் சொல்லப்பட்டது.

இப்படி ஸூத்ரகாரர் ஜக₃த்தினுடைய ப்₃ரஹ்மாதீ₄நத்வ ப்₃ரஹ்மகார்யத்வ ப்₃ரஹ்மாத்மகத்வ ப்ரஸாத₄நமுகே₂ந அதாத₃தீ₄ந்ய அதத்கார்யத்வாதி₃ நிரஸநம் பண்ணி, ப்₃ரஹ்மகாரணத்வ ஸ்தி₂ரீகரணம பண்ணின அர்த்த₂த்தை, ஆழ்வார் "நின்றனரிருந்தனர் கிடந்தனர் திரிந்தனர், நின்றிலரிருந்திலர் கிடந்திலர் திரிந்திலர், என்றுமொரியல்வினரென நினைவரியவர், என்றுமொரியல்வொடு நின்றவெந் திடரே"—"நிற்றலையுடையவர், இருத்தலையுடையவர், கிடத்தலையுடையவர், திரிதலை யுடையவர்கள், இவை இல்லாதவர்களென்று சொல்லப்படுகிற ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமத்₃வஸ்துக்களையும் ஸ்வாதீ₄நமாக உடைய வராய், என்றும் ஒருபடிப்பட்ட ஸ்வப₄ாவத்தை உடையவரென்று நினைக்கவுங்கூட அரியராய், இப்படி து₃ர்ஜ்ஞேயராயிருக்கும் இருப்பு என்றும் ஒருபடிப்பட்ட ஸ்வ ப₄ாவமாகவுடையராயிருக்கிற என்னுடைய ஸ்வாமியாய், த்₃ருஷ்ட₄ப்ரமாணமான வேதைக ஸமதி₄க₃ம்யரானவரே" என்று ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமத் ஸர்வ வஸ்துக் களினுடையவும் ப்₃ரஹ்மாதீ₄நத்வ ப்₃ரஹ்மகார்யத்வாதி₃களை ஸாமாநாதி₄கரண்யேந அருளிச்செய்கையாலே, 'இப்பாட்டுக்கும் சதுர்த்த₂பாத₃த்துக்கும் ஐகமத்யம் ஸ்பு₂டம். இங்கே "எந்திடரே" என்று சரமாதி₄கரண ஸித்₃த₄மான ப்ரமாண து₃ார்ட்₄யத்தோடே ப்ரத₂மாத்₄யாயார்த்த₂த்தை நிக₃மித்தாராயிற்று. இப்படி முதலாறு பாட்டுக்கும ப்ரத₂மாத்₄யாயத்துககும் ஐகமத்யம் வேத₃ாந்தத்₃வய ஸம்ப்ரத₃ாயமுடையவர்களுக்கு தி₃க்ப்ரத₃ர்ஶநம் பண்ணப்பட்டது, அநேகோப பத்திகளை உபபாதி₃ககுமளவில க்₃ரந்த₂ம விஸ்த்ருதமாமென்று ஸங்க்₃ரஹேண உபபாதி₃தமாயிற்று.

1. **ஶாரீரகாத்₃யாத்₄யாயேந க₃ாத₂ாஷட்கஸமார்த்த₂தா ।**
   **யதிராண்மதநிஷ்ட₂ாநாம் தி₃ங்மாத்ரம் த₃ர்ஶிதா முதே₃ ॥**

**இதி ஶாரீரகாத்₃யாத்₄யாய ப்ரத₂மக₃ாத₂ாஷட்கைககண்ட₂யம்.**

த்₃விதீயாத்₄யாயப்ரத₂மபாத₃த்துக்கும் ஏழாம் பாட்டுக்கும் ஐகமத்யமுண்டாம்படி எங்ஙனேயென்னில்: ப்ரத₂மபாத₃ார்த்த₂மான பரோத்₃ப₄ாவிததோ₃ஷ பரிஹாரத்தை இப்பாட்டிலே சொலலுகையாலே ஐகமத்யமுண்டு. பரோத்₃ப₄ாவிததோ₃ஷபரிஹாரம் இப்பாத₃ார்த்த₂மென்னுமிடத்தை 1. **"தத்ர பரைருத்₃ப₄ாவிதாஶ்ச தோ₃ஷா: பரிஹ்ருதா:"** என்று ப₄ாஷ்யகாரர்தாமே அருளிச்செய்தார்.

இப்பாத₃ந்தான் த₃ஶாதி₄கரணாத்மகமாயிருக்கும்; இப்பத்து அதி₄கரணத்திலும் ப்ரத₂மாதி₄கரணம தொடங்கி அடைவே (1) ஸாங்க்₂யஸ்ம்ருதி விரோத₄த்தாலும், (2) சதுர்முக₂வக்த்ருகமான யோக₃ஸ்ம்ருதி விரோத₄த்தாலும், (3) கார்யகாரணங்களான ஜக₃த்₃ ப்₃ரஹ்மங்களுக்கு ம்ருத்₃க₄டாதி₃களைப்போலே ஸாலக்ஷண்யமில்லாமையாலும், (4) அநேகதந்தரோக்தமான பரமாணுஜக₃த்காரணத்வநிரூபணத்துக்கு ப்ராப₃ல்யம் சொல்லவேண்டுகையாலும், (5) சித₃சித்₃ரூப கார்யக₃தமான பரிணாமித்வ ஸுகி₂த்வ து₃:க்கி₂தவாதி₃தோ₃ஷங்கள் ப்₃ரஹ்மத்துக்கு ப்ரஸங்கி₃க்கையாலும், (6)கார்யோபாத₃ாநங்களுக்கு நையாயிகமதரீத்யா பே₄த₃ம் சொல்லவேண்டுகையாலே நிமித்தோபாத₃ாநைக்யம கூடாமையாலும், (7) ஜீவன் ஸ்வாரூபி₄ந்நனுகில் ஹிதாகரணாதி₃தோ₃ஷம ப்ரஸங்கி₃க்கையாலும், (8) லோகத்தில் தத்தத்கார்யஜநநஶக்தியுக்தனுககும் உபகரணாபேக்ஷை காண்கையாலே ஸர்வஶக்தியுக்தமான பரப்₃ரஹ்மமும உபகரணமில்லாதபோது காரணமாகமாட்டாமையாலும், (9) ப்₃ரஹ்மம கார்யமாய்ப் பரிணமிக்கும்போது நிரவயவமான க்ருத்ஸ்ந ப்₃ரஹ்மமும் கார்யமாகை ப்ரஸங்கி₃க்கையாலும், (10) பரிபூர்ண ப்₃ரஹ்மத்துக்கு (ஸ்ருஷ்டியாலே ப்ரயோஜநமில்லாமையாலும்?)ஜக₃த்காரணத்வம் கூடாதென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாமளவில்;

(1) வேத₃விருத்₃த₄ ஸாங்க்₂ய ஸ்ம்ருதி விரோத₄ம் ப₃ாத₄கமல்லாமையாலும, (2)யோக₃ஸ்ம்ருதியும் விலக்ஷணனான சதுர்முக₂வக்த்ருகமாகிலும் வேத₃விருத்₃த₄தயா ப்ரமாணமல்லாமையாலும், (3) கோ₃மயவ்ருஶ்சிகாதி₃ விலக்ஷண வஸ்துக்களுக்கும் கார்யகாரணப₄ாவம் காண்கையாலே ஸலக்ஷண நியமமில்லாமையாலும், (4) அநேகமதநிரூபித பரமாணுகாரணத்வமும் கேவல தர்க்கமூலமாகையாலே, வேத₃ப்ரதிபாத்₃ய ப்₃ரஹ்மகாரணத்வத்துக்கு ப₃ாத₄கமல்லாமையாலும், (5) ப்ரளயகாலத்தில் ஸூக்ஷ்ம சித₃சித்₃ விஶிஷ்டப்₃ரஹ்மம் காரணமாய், ஸ்தூ₂ல சித₃சித்₃ விஶிஷ்டப்₃ரஹ்மம் கார்யமாயிருக்கையாலே, சித₃சித்₃ரூபகார்யக₃த தோ₃ஷங்கள் விஶேஷ்யமான ப்₃ரஹ்மத்தில் ப்ரஸங்கி₃யாமையாலும், (6) கார்யோபாத₃ாநைக்யம் ஶ்ருதிஶதஸமதி₄க₃தமாகையாலும், (7) ப்₃ரஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் விஶிஷ்டைக்யமொழிய ஸ்வரூபைக்யம் இல்லாமையாலே ஹிதாகரணாதி₃தோ₃ஷம் ப்ரஸங்கி₃யாமையாலும், (8) க்ஷீராதி₃களில் உபகரண நிரபேக்ஷமாக த₃த்₄யாதி₃ப₄ாவேந பரிணாமம் காண்கையாலே, பரப்₃ரஹ்மத்துக்கு உபகரணநைரபேக்ஷ்யேண காரணத்வம் கூடுகையாலும், (9) ஶ்ருதி ஸித்₃த₄ார்த்த₂த்திலே லௌகிக ப்ரமாண ஸித்₃த₄ார்த்த₂ ஸாம்யம் ப்ர

ஸங்கி₃யாமையாலும், (10) பரிபூர்ணமான ப்₃ரஹ்மத்துக்கும் ஜக₃த்ஸ்ருஷ்டி கேவல லீலார்த்த₂மாகக் கூடுகையாலும், ப்₃ரஹ்ம காரணவாத₃த்தில பரோத்₃பா₄வித தோ₃ஷங்கள் ப்ரஸரிக்காமையாலே ஜக₃த்துககு ப்₃ரஹ்மம் காரணமாகலாமென்று ஸித்₃த₄ாந்திக்கப்பட்டது.

இப்பாத₃த்தில பதது அதி₄கரணத்திலும சொன்ன பரோத்₃பா₄வித தோ₃ஷங்களையும தந்நிரஸநத்தையும—1. "ஸாங்க்₂ய ஸ்ம்ருத்யா விரோத₄ாத்₃விதி₄மத விஹதே: கார்யவைரூப்யதோऽஸ்மிந்நேகார்த்தே₂ऽநேகதந்த்ரோதி₃தவிஹதிதயா தே₃ஹபே₄ாக₃ாவியுக்த்யா। கார்யோபாத₃ாநபே₄த₃ாத் ஸ்வஹித விஹதித: காரகஸ்தோம ஹாநே: க்ருத்ஸ்நாம்ஸாத்₃யூஹ ப₃ாத₄ாத் க்ருதி விப₂லதயா வ்யர்த்தி₂தம் ப்ரத்யவித்₄யத் ॥" என்கிற ஶ்ரக்₃த₄ரையாலே ஸாராவளியிலே வேத₃ாந்தாசார்யர் ஸங்க்₃ரஹித்தருளினர். இப்பாத₃ார்த்த₂மான பரோத்₃பா₄விததோ₃ஷ பரிஹாரத்தை "திடவிசும் பெரிவளி நீர் நிலமிவைமிசை படர்பொருள் முழுவதுமாய் அவையவைதொறும் உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே"— "த்₃ருட₄மான ஆகாஶம், தேஜஸ்ஸு, வாயு, ஜலம், ப்ருதி₂வி தொடக்கமாய் விஸ்த்ருதமாயிருந்துள்ள ஸமஸ்த பத₃ார்த்த₂ங்களுக்கும் காரணமாய், அந்த வஸ்துக்கள் எல்லாவற்றிலும், ஶரீரங்கள்தோறும் ஆத்மா ப்ரவேஶித்திருக்குமாபோலே அந்தப்ரவிஶ்ய நியந்தாவாய், அவைகளாலே த₃ர்ஶிக்கப்படாதவனுமாய், ஸர்வ பத₃ார்த்த₂ங்களிலும் ப்ரத்யேகப்ரத்யேகம் பரிபூர்ணவர்த்தியாய், அபௌருஷேயத்வ நித்ய நிர்தோ₃ஷத்வாதி₃ கு₃ணங்களால் ஔஜ்ஜ்வல்யத்தையுடைய வேதை₃க ஸமதி₄க₃ம்யனாய், சராசராத்மக க்ருத்ஸ்ந ப்ரபஞ்ச ஸம்ஹாரியான தே₃வன்" என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார்.

இதில் ப்ரத₂ம த்₃விதீய சதுர்த்த₂ாதி₄கரணோக்தமான, ஸாங்க்₂யயோக₃ ஸ்ம்ருத்யாத்₃யநுரோத₄ம் பண்ணி ப்₃ரஹ்மகாரணத்வத்தைச் சலிப்பிக்கவொண்ணாதென்கிறஅர்த்த₂த்தை"சுடர்மிகுசுருதியுளுளன்"—"அபௌருஷேயத்வாத்₃யௌஜ்ஜ்வல்யாதி₄க்யத்தையுடைய வேத₃ப்ரதிபாத்₃யன்" — என்கிற இச்சந்தையாலே வெளியிட்டருளினர். த்ருதீயாதி₄கரணோக்தமான ஸாலக்ஷண்ய நியமாபா₄வமும்—"திடவிசும்பெரிவளி" என்று தொடங்கி விலக்ஷணமான ஆகாஶவாய்வாதி₃களுக்கும் ப்₃ரஹ்மகாரணத்வம் ப்ரதிபாதி₃தமாகையாலே ஸித்₃தி₄க்கிறது; கிஞ்ச, "திட விசும்பு" என்று காரணத்வத்தால் வந்த தா₃ர்ட்₄யத்தை ஆகாஶத்துக்கு அருளிச்செய்தார். 2. "ஆகாஶாத்₃வாயு:" என்று–வாய்வாதி₃காரணத்வம் ஆகாஶத்துக்குச் சொல்லப்பட்டது. ஸாங்க்₂யாதி₃களும்—ஆகாஶவாயுககளுக்கு ஸாரூப்யமின்றிக்கே ஒழிந்தாலும் கார்யகாரண பா₄வத்தை அங்கீ₃கரித்தார்கள். அப்படியே ஜக₃த்துக்கும் ப்₃ரஹ்மத்துக்கும் ஸாலக்ஷண்யமில்லாவிடிலும் கார்யகாரணபா₄வம் கூடுமென்று ஸூசிப்பித்தருளினர் "திடவிசுமபு" என்கிற இச்சந்தையாலே. ஆனால் பா₄ஷ்யகாரர் ஸாலக்ஷண்ய நியமாபா₄வத்துக்கு கோ₃மயவ்ருஶ்சிகாதி₃

த்₃ருஷ்டாந்தத்தை அருளிச்செய்வானென்னென்னில், ஶ்ருதி ஸித்₃த₄மான ஆகாஶ வாயு த்₃ருஷ்டாந்தத்திலும் ப்ரத்யக்ஷத்₃ருஷ்டாந்தம் புத்₃த்₄யாரூட₄மாமென்று கே₃ாமயவ்ருஶ்சிகாதி₃ த்₃ருஷ்டாந்தத்தைஅருளிச்செய்தார். 1. "த்₃ருஶ்யதே" என்கிற ஸௌத்ரபத₃ம் ஶாஸ்த்ர ப்ரத்யக்ஷ ஸித்₃த₄ார்த்த₂ங்களுக்குப் பொதுவாயிருக்கிறது; 2. "த₃ர்ஶநாத் ஸ்ம்ருதேஶ்ச" 3. "த்₃ருஷ்டஸ்ம்ருதிப்₄யாம்" இத்யாதி₃ ஸூத்ரங்களில் த₃ர்ஶநத்₃ருஷ்ட ஶப்₃த₃ங்கள் ஶ்ருதிபரமாகக் காண்கையாலே, 1. "த்₃ருஶ்யதே" என்கிற இப்பத₃ம ஶ்ருதி ஸித்₃த₄ார்த்த₂த்தைக் காட்டுகிறது.

அதி₄கரணாந்தரே — 4. "உபஸம்ஹாரத₃ர்ஶநாந்நேதி சேந்ந க்ஷீரவத்₃தி₄" 5. "தே₃வாதி₃வத₃பி லோகே" என்கிற ஸூத்ரத்₃வயத்தாலே லௌகிகமான க்ஷீரத்தையும், வைதி₃கரான தே₃வர்களையும் ப்₃ரஹ்மத்துக்கு ஸாமக்₃ரீநைரபேக்ஷ்யேண காரணத்வம் கூடுமென்னுமிடத்துக்கு த்₃ருஷ்டாந்தமாக ஸூத்ரகாரர் உதா₃ஹரித்தார். லௌகிக த்₃ருஷ்டாந்தத்தில் வைதி₃கத்₃ருஷ்டாந்தம் மிகவும அலௌகிகமான ப்₃ரஹ்ம விஷயத்தில் பரிக்₃ராஹ்யமென்னுமிடத்தை—6. "தே₃வாதீ₃நாம் வேதா₃வக₃த ஶக்தீநாம் த்₃ருஷ்டாந்ததயா உபாதா₃நம் ப்₃ரஹ்மணோ வேதா₃வக₃த ஶக்தேஸ் ஸூசக₂க்₃ரஹணாயேதி ப்ரதிபத்தவ்யம்" என்று ப₄ாஷ்யகாரர்தாமே அருளிச்செய்தார். இப்படி லோகவேத₃ ஸித்₃த₄ங்களில் த்₃ருஷ்டாந்தகத₂நம் காண்கையாலே, "திடவிசும்பு" என்கிற இச்சந்தைக்கு, கார்யகாரணஸாலக்ஷண்ய நியமாப₄ாவ ஸூசகத்வம் ஸித்₃த₄ம். பஞ்சமாதி₄கரணோக்தமான சித₃சித்₃ரூப ஜக₃த்₃க₃ததோ₃ஷம் ப்₃ரஹ்மத்தில் ப்ரஸங்கி₃யாதென்கிற அர்த்த₂மும் — "உடல்மிசை உயிரெனக் கரந்து" என்கிற சந்தையிலே—ஶரீரங்களில் ஜீவாத்மாவைப்போலே ஸகல பதா₃ர்த்த₂த்திலும் வ்யாபித்து அங்யைரத்₃ருஶ்யனாயிருப்பனென்று ஸ்பு₂டமாகச் சொல்லப்பட்டது.

ஷஷ்ட₂ாதி₄கரணோக்தமான கார்யோபாதா₃நைக்யம் "திடவிசும்பெரிவளி நீர் நிலமிவைமிசை, படர் பொருள் முழுவதுமாய்" என்று ஜக₃த்₃ப்₃ரஹ்மணோஸ் ஸாமாநாதி₄கரண்யகத₂நத்தாலே அதிஸ்பு₂டமாக அறியலாம். ஸப்தமாதி₄கரணோக்தமான ஹிதாகரண-அஹிதகரணாதி₃ தோ₃ஷப்ரஸங்க₃ பரிஹாரமும் "உடல்மிசை உயிரெனக்கரந்து" என்று ஜீவேஶ்வரர்களுக்கு ஶரீராத்மப₄ாவேந பே₄த₃த்தைச் சொல்லுகையாலே ஸ்பு₂டமாக அறியலாம். அஷ்டமாதி₄கரண ப்ரமேயமான ஸாமக்₃ரீநைரபேக்ஷ்யேண ப்₃ரஹ்மகாரணத்வம் கூடுமென்கிற இதுவும் "இவையுண்ட சுரனே" என்கிறவிடத்தாலே ஸூசிதம்; அதெங்ஙனேயென்னில், "சுரன்" என்று ஆஶ்சர்யஶக்தியோக₃ம் சொல்லப்பட்டது; சுரருக்கிறே காரகாபேக்ஷையின்றிக்கே ஸங்கல்பமாத்ரத்தாலே ஸ்ருஷ்டி கூடுவது. 7. "யதா₂ தே₃வாத₃ய: ஸ்வே ஸ்வே லோகே ஸங்கல்பமாத்ரேண ஸ்வாபேக்ஷிதாநி ஸ்ருஜந்தி, தத₂ாऽஸௌ புருஷோத்தம: க்ருத்ஸ்நம் ஜக₃த் ஸங்கல்பமாத்ரேண ஸ்ருஜதி" என்றிறே ப₄ாஷ்யகாரர் 8. "தே₃வாதி₃வத₃பி லோகே" என்கிற ஸூத்ரவ்யாக்₂யாநத்திலே அருளிச்செய்தது.

ஆக, "சுரர்" என்கிற இப்பதத்தாலே—ஸாமக்ரீநைரபேக்ஷ்யேண காரணத்வ ப்ரஸாதநம பண்ணின அஷ்டமாதிகரண பரமேயஸூசநம ஸித்தம். "எங்கும் பரந்து—சுடர்மிகு சுருதியுள உளன்" எனகிற இவவளவாலே—நவமாதிகரணோக்த மான "யதாஶ்ருதி அலௌகிகார்த்த ஸ்வீகாரம பண்ணவேணும்"என்கிறஅர்த்தம சொலலபபட்டது."இவையுணட சுரனே"எனகிற இச்சங்கையாலேதானே பரிபூர்ண னுக்கும லீலாரஸநிஷ்பாதநார்த்தமாக ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள கூடுமென்கிற அர்த த்தையும அருளிச்செய்தார். அதெங்ஙனேயெனனில, 1."**அமரா நிர்ஜரா தேவாஸ் த்ரிதஶா விபுதாஸ் ஸுரா:**" என்று ஸுரஶப்தத்துக்கு தேவஶப்தம பாயாயமாக நாமாநுஶாஸநம இருககையாலே ஸுரனெனறுல தேவனெனறு சொலலிறரும. தேவஶப்தத்துக்கு - 2. "**திவு-க்ரீடா விஜிகீஷா வ்யவஹார த்யுதி ஸ்துதி மோத மத ஸ்வப்ந காந்தி கதிஷு**" என்று தாதுபாடம உண்டாகையாலே, க்ரீடாவத்தவமும தேவஶப்தார்த்தம என்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம. ஆகையாலிறே வேதபுருஷன்—ஜகத்ஸம்ஹாராதிகள் கேவல லீலாரூபம் என்கிற கருத்தாலே ஸுபாலோப நிஷத்திலே, 3. "**தம: பரே தேவ ஏகீபவதி**" என்று காரணவஸ்துவிலே தேவ ஶப்த ப்ரயோகம் பண்ணினன். ஆகையால இச்சங்கை—பரிபூர்ணனுக்கு லீலா ரூபேண ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் கூடுமென்று சொல்லுகிற தஶமாதிகரணார்த தம் என்னக் குறையிலலை. இப்படி த்விதீயலக்ஷண ப்ரதமபாதத்துககும ஏழாம பாட்டுக்கும் ஐகமத்யம் உண்டென்னுமிடம் ஸித்தம.

தர்க்கபாதத்துக்கும் அஷ்டமநவமகாதைகளுக்கும் ஐகமத்யமுண்டாம்படி எங்ஙனேயென்னில் ; தர்க்கபாதத்தில் பரபக்ஷ ப்ரதிக்ஷேபம பண்ணபபடுகிறது. 4. "**ஸ்வபக்ஷரக்ஷணாய பரபக்ஷா: ப்ரதிக்ஷிப்யந்தே**" என்றிறே இப்பாதார்த்ததமதை பாஷ்யகாரர் அருளிச்செய்தது. ஆகையாலே பரபக்ஷப்ரதிக்ஷேபபரமான இவ் விரண்டு பாட்டுக்கும் தர்க்கபாதத்தோடு ஐககண்ட்யமுண்டு.

அதிகரணாஷ்டகாத்மகமாயிருக்கிற இப்பாதத்தில — ப்ரதமாதிகரணம் தொடங்கி, க்ரமமாக அப்ரஹ்மாத்மக ப்ரதாநகாரண வாதிகளான ஸாங்க்யர் களுடைய மதப்ரக்ரியையையும, பரமாணுகாரண வாதிகளான வைபாஷிகருடைய மதரீதியையும், பௌத்தர்களில் வைத்துக்கொண்டு பாஹ்யார்த்தாஸ்தித்வ வாதிகளான வைபாஷிக ஸௌத்ராந்திகர்களுடைய ஜகத்தினுடைய க்ஷணி கத்வ வாதத்தையும், ஜ்ஞாநமாத்ராஸ்தித்வவாதியான யோகாசாரனுடைய ஜ்ஞாநாகாரவ்யதிரிக்தமான அர்த்தாகாராபாவ ப்ரதிபாதநத்தையும், மாத்யமிக னுடைய ஸர்வஶூந்யோபபாதந பங்கியையும், ஜைநர்களுடைய அநைகாந்தி கத்வ ப்ரதிபாதந ப்ரகாரத்தையும, பாஶுபதர்களுடைய வேதவிருத்தாசார தத்வோபபாதநத்தையும் பலபடிகளாலே நிரஸித்து, பஞ்சமவேத பாரதாதி ப்ரஶஸ்தமாய், பரமபுருஷ ப்ரணீதமாயிருந்துள்ள ஸ்ரீ பாஞ்சராத்ரததினுடைய நிரங் குஶப்ராமாண்யத்தையும் ஸூத்ரகாரர் ஸாதித்தார ; இப்பாதார்த்தத்தை

1. " பாதே₃ऽஸ்மிந் காபிலஸ்தை₂: கணபு₄க்₃பி₄மதைர் பௌ₃த்₃தை₄பா₄ஷிகாத்₃யைர் யோகா₃சாராபி₄தா₄நைஸ் ஸுக₃தமதரஹஶ்ஶூந்யவாத₃ப்ரஸக்தை:| அர்ஹத்ஸித்₃தா₄ந்தபு₄க்தை: பஶுபதிஸமயஸ்தா₂யிபி₄ஶ்சாவரோத₄ம் க்ஷிப்த்வாऽதோ₂ பஞ்சராத்ரம் ஶ்ருதிபத₂மவதத்₃ பஞ்சமாம்நாயத₃ர்ஶீ || " என்று ஸாராவளியிலே வேதா₃ந்தாசார்யர் அருளிச்செய்தார்.

இம்மதங்களில் ஸாங்க்₂யவைஶேஷிகபாஶுபதர்கள்—" கபிலாக₃மாநுமாந பாஶுபத ஶாஸ்த்ரங்களுக்கு வேத₃ங்கள் அநுக்₃ராஹகங்கள்" என்று அப்ரதா₄நமாயாகிலும் வேத₃த்தையும் அங்கீ₃கரித்தார்கள். தத்₃வ்யதிரிக்த மதஸ்த₂ர்கள் வேத₃த்தை உபஸர்ஜநப்ரமாணமாகவும் அங்கீ₃கரியாதே வேதா₃ப்ராமாண்ய ப்ரஸாத₄ந பூர்வகமாக ஸ்வமதோபபாத₃நம் பண்ணுவர்கள். இப்படி இரண்டு வர்க்க₃மாயிருந்துள்ள பா₃ஹ்யமதங்களில் ப்ரத₂மவர்க்க₃த்தை நிரஸித்தமையை எட்டாம் பாட்டாலே ஸூசிப்பிக்கிறார். த்₃விதீயவர்க்க₃த்தை நிரஸித்தமையை ஒன்பதாம் பாட்டாலே ஸூசிப்பித்தருளுகிறார். "சுரரறிவருநிலை விண்முதல் முழுவதும், வரன்முதலாயவை முழுதுண்ட பரபரன், புரமொருமூன்றெரித்தமரர்க்கு மறிவியந்து, அரனயனென உலகழித்தமைத்துளனே" — "ப்₃ரஹ்மாதி₃களாலும் அறியவொண்ணாத ஸ்வபா₄வத்தையுடைய மூலப்ரக்ருதி தொடக்கமான ஸகல ஜக₃த்துக்கும் வரிஷ்ட₂காரணமாய், அவற்றையெல்லாம் ஸம்ஹரித்தருளின பராத்பரனை ஈஶ்வரன் ருத்₃ராந்தர்யாமியாய்க்கொண்டு த்ரிபுரத்தை ஸம்ஹரித்து ஜக₃த் ஸம்ஹாரமும் பண்ணுகிறான்; சதுர்முகா₂ந்தர்யாமியாய்க்கொண்டு இவ்வருகுள்ள ஜக₃த்தையும் ஸ்ருஷ்டித்து தே₃வர்களுக்கு ஜ்ஞாநப்ரதா₃நத்தையும் பண்ணுகிறான்"— என்று இப்பாட்டாலே ஜக₃த்தினுடைய ப்₃ரஹ்மாத்மகத்வத்தையும், க்ஷேத்ரஜ்ஞர்களான ப்₃ரஹ்ம ருத்₃ரர்களுடைய ஸ்ரஷ்ட்ருத்வ ஸம்ஹர்த்ருத்வாதி₃கள் ப₄க₃வத₃தீ₄நமென்கிற அர்த்த₂த்தையும் அருளிச்செய்கையாலே, அப்₃ரஹ்மாத்மக ப்ரதா₄நகாரணவாதி₃யான ஸாங்க்₂யமத ப்ரக்ரியையையும், ருத்₃ரபாரம்யோபபாத₃நம் பண்ணுகிற பாஶுபதப்ரக்ரியையையும், பரமாணுகாரணவாதி₃மதத்தையும் நிரஸித்தருளினமை ஸூசிதம்.

அதெங்ஙனேயென்னில்; ஸாங்க்₂யோக்தமான அப்₃ரஹ்மாத்மக ப்ரதா₄ந நிரஸநம்—"சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் வரன்முதலாய்" என்று - "ப்ரக்ருதி மஹத₃ஹங்காராதி₃ தத்வங்களுக்கும் பரமாத்மாவே காரணம்"- என்று அருளிச் செய்கையாலே ஸூசிதம். "அவை முழுதுண்ட பரபரன்" என்று ஸர்வஜக₃த்ஸம் ஹாரியென்கையாலே ஸாங்க்₂யமதத்தில் ஈஶ்வரனை அங்கீ₃கரியாவிடில் கேவல ப்ரதா₄நமே ஸ்வதந்த்ரமாய்ப் பரிணமிக்கும்போது ஸர்க்க₃வ்யதிரேகேண ப்ரதிஸர்க்கா₃வஸ்தை₂யின்றிக்கே யொழியவேணுமென்று உபபாத₃நம்பண்ணுகிற-2.**"வ்யதிரேகாநவஸ்தி₂தேஶ்சாநபேக்ஷத்வாத்"** என்கிற ஸூத்ரோக்த தூ₃ஷணம் ஸூசிதம்; நிரவயவமான பரமாணுக்களுக்கு ஜக₃த்காரணத்வம் கூடாதென்கிற நையாயிக

தூ₃ஷணமும், ப்ரக்ருதிமஹதத₃ஹங்காராதி₃களுக்கும் ஈஶ்வரனே வரிஷ்ட₂காரண மென்றருளிச்செய்த இச்சந்தையாலேதானே ஸூசிதம்.

பாஶுபதோக்தமான ருத்₃ரபாரம்ய ப்ரதிஷேத₄மும், ருத்₃ரனுடைய ஸம்ஹர்த்த்ருத்வ த்ரிபுரத₃ஹநாதி₃களும், "அரனெனப் புரமொரு மூன்றெரித்து உலகழித்துளன்" என்று ப₄க₃வத₃ந்தர்யாமித்வக்ருதமாக அருளிச்செய்கையாலே வ்யக்தமாகச் சொல்லப்பட்டது. ஸூத்ரகாரர் பண்ணின ருத்₃ரபாரம்யநிஷேத₄ம சதுர்முக₂பாரம்ய நிஷேத₄த்துக்கும உபலக்ஷணமென்னும் கருத்தாலே சதுர்முக₂னுடைய ஸ்ரஷ்ட்ருத்வ ஜ்ஞாநப்ரத₃த்வாதி₃களும் ப₄க₃வத₃நுப்ரவேஶக்ருதமென்று ஆழவார் சதுர்முக₂பாரம்யத்தையும் நிஷேதி₄த்தார். ஸூத்ரகாரர் சதுர்முக₂ பாரம்ய நிஷேத₄ம் பண்ணுமைக்கு அடி, மஹாமல்லநிரஸநந்யாயேந ருத்₃ரபாரம்யநிஷேத₄ம பண்ணவே சதுர்முக₂ பாரமயநிஷேத₄மும் தன்னடையே வருமென்று கருத்து. ஆழ்வார் மந்த₃விஷந்யாயேந சதுர்முக₂பாரம்யத்தையும் எடுத்து நிஷேதி₄த்தார்.

இனி இரண்டாம வர்க்க₃த்தை—"உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள், உளனலனெனிலவன் அருவமிவ்வருவுகள், உளனென இலனென இவைகுணமுடைமையில், உளனிருதகைமையொடொழிவிலன் பரந்தே"—"ஈஶ்வரனுடைய இல்லாமையை ஸாதி₄க்கிற நீ உளனென்கிற சொல்லாலே ஸாதி₄த்தாயாகில், உண்மையே ஸித்₃தி₄க்குமதொழிய உன்னுடைய மதமான இல்லாமை ஸித்₃தி₄யாது; உளனலனென்கிற சொல்லாலே இல்லாமையை ஸாதி₄த்தாயாகில், லோகத்திலே இல்லையென்கிற சொல்லுக்கு, ஸ்தூ₂லாவஸ்தை₂போய் ஸூக்ஷ்மாவஸ்தா₂பந்நமாயிருக்கிறமை அர்த்த₂மாமொழிய உன்னபி₄மதமான ஶூந்யத்வம் ஸித்₃தி₄யாது; இப்படி உண்மையும் இன்மையுமாகிற கு₃ணத்₃வயயுக்தமாக ஸ்வபக்ஷபரபக்ஷரீத்யா ஸித்₃தி₄க்கையாலே அஸ்தித்வ நாஸ்தித்வரூப கு₃ணவிஶிஷ்டமாக பரப்₃ரஹ்மம ஸித்₃தி₄க்கும். இப்படி அநபி₄மதமான அர்த்த₂ம் அங்கீ₃கரிக்க வேண்டுகையாலே அநந்தகு₃ண விபூ₄திமானகவும் எம்பெருமானையும் அங்கீ₃கரிக்கலாம்" — என்று நிரஸித்தருளினர்.

அதில்,இந்த மதங்களில் பௌத்₃த₄மதத்தில் ஜக₃த்க்ஷணிகத்வ வாதி₃களான வைப₄ாஷிக மதஸ்த₂ர்கள்—பார்த்தி₂வ ஆப்ய தைஜஸ வாயவீய பரமாணுக்கள் ப்ருதி₂வ்யப்தேஜோவாயுரூபேண ஸம்ஹதங்களாம். அதில்நின்றும் ஶரீரேந்த்₃ரிய விஷயஸங்க₄ாதங்களுண்டாம். அதிலே ஶரீராந்தர்வர்த்தியாய் க்₃ராஹகாபி₄மாநாரூட₄மான விஜ்ஞாநஸந்தாநமே ஆத்மாவென்று பேர்பெற்றுக்கிடக்கிறதென்று உபபாதி₃த்த அர்த்த₂த்தை—1. "**ஸமுத₃ாய உப₄யஹேதுகேऽபி தத₃ப்ராப்தி:**" என்கிற ஸூத்ரத்திலே, யாதொரு பரமாணுஹேதுக ப்ருதி₂வ்யாதி₃ பூ₄தஸமுத₃ாயமுண்டு, யாதொரு ப்ருதி₂வ்யாதி₃ஹேதுகபூ₄தேந்த்₃ரியாதி₃ரூபஸமுத₃ாயமுண்டு, இவ்விரண்டு ஸமுத₃ாயத்தினின்றும், ஜக₃த₃ாத்மக ஸமுத₃ாயோத்பத்தி கூடாது. பரமாணுக்களும்,

ப்ருதி₂வ்யாதி₃ பூ₄தங்களும் க்ஷணிகமென்று அங்கீ₃கரிக்கையாலே, க்ஷணத்₄வம்ஸிக ளான பரமாணுக்களும்,பூ₄தங்களும் எப்போதான் ஸம்ஹதங்களாகப்போகிறது? எப் போதான் ஜ்ஞாநவிஷயீபூ₄தங்களாய் ஹாநோபாத₃ாநாதி₃வ்யவஹாராஸ்பத₃மாகப் போகிறது? என்றித்யாதி₃ யுக்த்யாதி₃களாலே ஶாரீரகத்திற்சொன்ன க்ஷணிகத்வ வாத₃நிரஸநக்ரமத்தை—ஆழ்வாரும், அஸ்திநாஸ்த்யுப₄ய வ்யவஹாரத₃ஶையிலும் ஸ்தூ₂லஸூக்ஷ்மோப₄யாவஸ்த₂ா விஶிஷ்டமாக வஸ்துவினுடைய ஸ்தி₂ரத்வ ப்ரதி பாத₃கமாயிருக்கிற-"உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள்" என்கிற இச்சந்தையாலே ஸூசிப்பித்தருளினர். 1. "ப்ரதி ஸங்க்₂யாऽப்ரதிஸங்க்₂யாநிரோத₄ாப்ராப்திரவிச்சே₂த₃ாத்" என்கிற ஸூத்ரப₄ாஷ்யத்திலே **2. "ஸத உத்பத்திவிநாஶௌ நாம அவஸ்த₂ாந்தராபத்திரேவ, அவஸ்த₂ாயோகி₃ து த்₃ரவ்யமேகமேவ ஸ்தி₂ரமிதி காரணத₃நந்யத்வம் கார்யஸ்யோபபாத₃யத்₃பி₄ரஸ்மாபி₄: 'தத₃நந்யத்வம்' இத்யத்ர ப்ரதிபாதி₃தம். நிர்வாணஸ்ய தீ₃பஸ்ய நிரந்வயவிநாஶ த₃ர்ஶ நாத் அந்யத்ராபி விநாஶோ நிரந்வயோऽநுமீயத இதி சேந்ந; க₄டஶராவாதௌ₃ ம்ருத₃ாதி₃த்₃ரவ்யாநுவ்ருத்த்யுபலப்₃த்₄யா ஸதோ த்₃ரவ்யஸ்ய அவஸ்த₂ாந்தராபத்திரேவ விநாஶ இதி நிஶ்சிதே ஸதி, ப்ரதீ₃பாதௌ₃ ஸூக்ஷ்மத₃ஶாபத்த்யாப்யநுபலம்பே₄ாப பத்தேஸ் தத்ராப்யவஸ்த₂ாந்தராபத்திகல்பநஸ்யைவ யுக்தத்வாத்"** என்று "உளனெனி லுளன்" என்கிற இப்பாட்டுப்பாதியை உட்கொண்டு வ்யாக்₂யாநம் செய்தமை ஸ்பஷ்டமாயிருக்கையாலே இவ்வதி₄கரண ப்ரமேயம் இதிலே உண்டென்னு மிடம் ஸித்₃த₄ம்.

இனி, ஸௌத்ராந்திகமதத்தில் — ஜ்ஞாநோத்பத்திகாலத்திலே அர்த்த₂மில் லாமையாலே ஜ்ஞாநவிஷயத்வமில்லை என்னவொண்ணுது;ஜ்ஞாநவிஷயத்வமாவது— ஜ்ஞாநோத்பத்தி ஹேதுத்வமிறே. ஆனுல் சக்ஷுராதி₃களுக்கும் ஜ்ஞாநவிஷயத்வம் வாராதோவென்னில், ஸ்வாகார ஸமர்ப்பணேந ஜ்ஞாந ஹேதுவுக்கே ஜ்ஞாந விஷயத்வமாகையாலே, வாராது; அர்த்த₂மானது – ஜ்ஞாநத்திலே ஸ்வா காரத்தை ஸமர்ப்பித்து நஷ்டமாய்ப் போனுலும், ஜ்ஞாநக₃தமான நீலாத்₃யாகாரத் தாலே அநுமிக்கப்படும். ஆகையால் அர்த்த₂க்ருதமே ஜ்ஞாநவைசித்ர்யம்—என்று உபபாதி₃த்த ப்ரமேயத்திலே—த₄ர்மி நஷ்டமானுல் தத்₃த₄ர்மங்களுக்கு அந்யத்ர ஸங்க்ரமணம் கண்டதில்லை; அப்படியே அர்த்த₂ம் நஷ்டமாய் தத்₃க₃தாகாரம் ஜ்ஞாநத்திலே ஸங்க்ரமிக்கிறது என்னவொண்ணுமையாலே, ஜ்ஞாநத்தாலே அர்த் த₂ம் அநுமிக்கப்படுகிறதென்னவொண்ணுது—என்று ஶாரீரகத்திலே சொன்ன தூ₃ஷணமும்—" அவனுருவமிவ்வுருவுகள் " என்று ஐந்த்₃ரியிகத்வத்தை விஷயங் களுக்கு அருளிச்செய்கையாலே விஷயங்கள் அநுமேயங்களன்றென்று ப₂லிக்கை யாலே ஸூசிதமாயிற்று.

யோகா₃சார மதஸ்த₂ர்கள்—விஜ்ஞாநமாத்ரமேயுள்ளது, அர்த்த₂தத்வமில்லை; அர்த்த₂த்துக்கும் வ்யவஹாரயோக்₃யத்வம் ஜ்ஞாநப்ரகாஶாயத்தமென்று கொள்ள

வேணும். அந்யதா₂ ஸ்வபரவேத்₃யங்களுக்கு அதிஶயமற்றுப்போம்; ப்ரகாஶமான ஜ்ஞாநத்துக்கு, நிராகாரத்துக்கு ப்ரகாஶம் கூடாமையாலே ஸாகாரத்வம் அங்கீ₃ கரிக்கவேணும்; இனி, தோற்றுகிற ஆகாரமொன்று ஜ்ஞாநத்தினுடையதொழிய அர்த்த₂த்தினுடையதன்று. இந்த ஆகாரத்துக்கு ப₃ஹிரவப₄ாஸம ப்ரகாருநம்—இத்யாதி₃ யுக்திகளாலே அர்த்த₂ ஶூந்யத்வோபபாத₃நம பண்ணினதை—"ஜ்ஞாதாவுக்கு விஷயவ்யவஹார ஹேதுவான ஜ்ஞாநதத்வம முதலிலே நிர்விஷயமாகில இல்லையாயேவிடும்" இத்யாதி₃ யுக்திகளாலே ஶாரீரகததிலே நிரஸித்ததையை—"அவனுருவம, அவனருவம, பரந்தேயொழிவிலன" எனகிற சந்தைகளாலே அர்த்த₂தத்வாங்கீ₃காரமுகே₂ந ஸூசிப்பித்தருளினுர்.

இன்னமும 1. "நாப₄ாவ உபலப்₃தே₄:" என்கிற ஸூத்ரத்திலே—அர்த்த₂தத்வமின்றிக்கேயொழிந்தால் தத்₃வ்யவஹார யோக்₃யதாபாத₃க ஸ்வப₄ாவமான ஜ்ஞாந தத்வமும் ஸித்₃தி₄யாதென்று சொன்ன யுக்தியும் "உருவம" என்கிற பதந்த்நாலே ஸித்₃தி₄க்கிறது; அதெங்ஙனேயென்னில, "உருவம்" என்கிற ஶப்₃த₃ம்-ஸ்தூ₂ல பத₃ார்த்த₂ வாசியென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம; ஐந்த்₃ரியிகத்வமுள்ளதுக்கிறே ஸ்தூ₂லத்வமுள்ளது. இந்த ஐந்த்₃ரியிகத்வ ப்ரதிபாத₃நத்தாலே, அதொழிந்தால், தத்₃வ்யவஹார யோக்₃யதாபாத₃க ஸ்வப₄ாவமான ஜ்ஞாநதத்வம் இல்லாதேயொழியுமென்கிற யுக்தியை ஸூசிப்பிக்கையாலே அது ஸித்₃தி₄க்கிறது. மாத்₄யமிகபக்ஷ நிராஸக்ரமம் இப்பாட்டென்னுமிடம் ஸர்வஸம்ப்ரதிபந்நமாகையாலே அதிஸ்பு₂டமாயிருக்கும். ஜைநமதஸ்த₂ர்கள் சொல்லுகிற ஜக₃த₃நைகாந்திகத்வ நிராஸமும், ஸத்தாயாகிலும் அஸத்தாயாகிலுமிருக்குமொழிய ஸத₃ஸத்தாயிராதென்று "உளனெனிலுளனவனுருவம் இவ்வுருவுகள், உளனலனெனிலவனருவம் இவ்வருவுகள்"என்கிற பாட்டுப்பாதியாலே அருளிச்செய்கையாலே ஸூசிதம்.

ஆனுல் பிள்ளை "ஸர்வஶூந்யவாதி₃யை நிரஸிக்கிறுர் இப்பாட்டாலே" என்றும், "2. 'ஸர்வதா₂நுபபத்தே:' என்கிற ஸூத்ர ப₄ாஷ்யம் இப்பாட்டையுட்கொண்டு ப்ரவ்ருத்தமாயிற்று" என்றும், மாத்₄யமிகமதமாத்ர நிராஸபரமாக வ்யாக்₂யாநம் செய்தருளுகையாலே, இது அவர்க்கு அநபி₄மதமன்றே? என்னில்; இப்பாட்டில் பத₃ங்களிலே மாத்₄யமிக நிரஸநம் நேரே தோற்றுகையாலே, தந்மதநிராஸபரமாக யோஜித்தருளினுர். * வீடுமின் முற்றின் ப்ரவேஶத்திலே "முதல் திருவாய்மொழி பூர்வத்₃விகார்த்த₂ம்" என்று அவர்தாமே அருளிச்செய்கையாலே, இந்த பரத₂ம த₃ஶகத்திலே தத்ஸூசநம் ஆவஶ்யகம்; க₃ாத₂ாந்தரத்திலே வைப₄ாஷிகாதி₃ மதநிராஸம் அநவஸரக்₃ரஸ்தமாயிருக்கும். இப்பாட்டில் பத₃ங்களும் பூர்வோக்த ப்ரக்ரியையாலே வைப₄ாஷிகாதி₃மத நிராஸ ஸூசகங்கள் என்னுமிடம் ஸ்வரஸத: ஸம்ப்ரதிபந்நம். வைப₄ாஷிகமத நிராஸ ஸூத்ரப₄ாஷ்யமும் இப்பாட்டில் சந்தைகளை உட்கொண்டு ப்ரவ்ருத்தம என்னுமிடம் பூர்வமேவ உபபாதி₃தமாகையால் பிள்ளைக்கும் இது அபி₄மதமாகக் குறையில்லை.

பாஞ்சராத்ர ப்ராமாண்ய ஸமர்த்த₂ந ஶாரீரகாம்ஶம் ப்ராஸங்கி₃கமாகையாலும், வேத₃பாஞ்சராத்ரங்களுக்கு அபௌருஷேயத்வ நித்யநிர்து₃ஷ்டத்வ பரமபுருஷவக்த்ருகத்வங்கள் நிரங்குஶ ப்ராமாண்ய ஹேதுக்களாய், இரண்டுக்கும் அத்தாலே வந்த பே₄த₃மொழிய பாஞ்சராத்ரத்துக்கும் வேத₃துல்ய ப்ராமாண்யத்தில் தட்டில்லாமையாலே, "சுடர்மிகு சுருதியுள் உளன்" என்று அபௌருஷேயத்வாத்₃யௌஜ்ஜ்வல்யவத்₃வேத₃ப்ராமாண்ய ப்ரதிபாத₃நத்தாலே, தந்ந்யாயேந பாஞ்சராத்ர ப்ராமாணயம ஸித்₃தி₄க்கும் என்கிற கருத்தாலும ஆழ்வார் உபேக்ஷித்தருளினர். ஸூத்ரகாரர், தந்த்ரஸாமாந்ய ப்ரயுக்தமான ம்ருது₃ப்ரஜ்ஞர்களுக்குள்ள காலுஷ்ய ஶாந்த்யர்த்த₂மாக, வேத₃துல்ய ப்ராமாண்யம் ஸித்₃த₄மாயிருக்கச் செய்தேயும் தத்ப்ராமாண்ய ஸமர்த்த₂நம் பண்ணினர். **ஆக, அஷ்டம நவமகா₃தை₂களுக்கும் தர்க்கபாத₃த்துக்கும் ஐகமத்யம் ஸித்₃த₄ம்.**

பத்தாம் பாட்டுக்கும் நிக₃மநப்பாட்டுக்கும் த்ருதீய துரீயபாத₃ங்களுக்கும் ஐகமத்யம் உண்டாம்படி எங்ஙனே? என்னில்; ஜக₃த்தினுடைய ப்₃ரஹ்ம கார்யதா ஶோத₄ந ப்ரகாரத்தை இப்பாட்டுக்களாலே அருளிச்செய்கையாலே ஐக்யமுண்டு.

வியத்பாத₃ ப்ரத₂மாதி₄கரணத்திலே — சா₂ந்தோ₃க்₃யத்தில் வியது₃த்பத்த்ய ஶ்ரவணத்தாலே வியத்து ப்₃ரஹ்மகார்யமன்றென்று ஶங்கித்து, தைத்திரீயத்தில் வியது₃த்பத்தி ஶ்ருதமாகையாலும், சா₂ந்தோ₃க்₃யத்திலும் ஸர்வஶாகா₂ப்ரத்யய ந்யாயேந வியது₃த்பத்தி வருகையாலும், வியத்து ப்₃ரஹ்மகார்யமென்று நிர்ணயித்தார். த்₃விதீயாதி₄கரணத்தில்—அநந்தரபூர்வகாரணமான கேவலாऽऽகாஶாதி₃களில் நின்றும் அவ்யவஹிதாऽநந்தரவாய்வாதி₃கள் உத்பந்நமாகிறதென்று ஶங்கித்து, ஆகாஶாதி₃ஶரீரக பரமாத்மாவினிடத்தில்நின்றும் வாய்வாத்₃யுத்பத்தியொழிய கேவல பூர்வதத்வத்தில்நின்றும் வாய்வாத்₃யுத்பத்தியில்லையென்று நிர்ணயித்தார்.

த்ருதீயாதி₄கரணத்தில் — **1."தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ"** இத்யாதி₃ ஶ்ருதிகளாலே ஜீவனுக்கும் உத்பத்தியுண்டென்று ஶங்கித்து, **2. "ந ஜாயதே ம்ரியதே"** இத்யாதி₃ ஶ்ருதிகளாலே நித்யத்வம் ஶ்ருதமாகையாலும், உத்பத்திஶ்ருதி - ஜ்ஞாந ஸங்கோச விகாஸத்தைச் சொல்லுகிறதொழிய ஸ்வரூபாऽநித்யத்வத்தைச் சொல்லாமையாலும், ஜீவனுக்கு உத்பத்தியில்லையென்று நிர்ணயித்தார். சதுர்த்த₂ாதி₄கரணத்தில் — ப்ராஸங்கி₃கமாக **3. "யோ விஜ்ஞாநே திஷ்ட₂ந்"** இத்யாதி₃ஶ்ருதிகளாலே ஆத்மா கேவல ஜ்ஞாநஸ்வரூபனென்று ஶங்கித்து, **4. "விஜ்ஞாதாரம்"** இத்யாதி₃ ஶ்ருதிகள் ஜீவனை ஜ்ஞாதாவென்று ப்ரதிபாதி₃க்கையாலும், ஸ்வரூபத்தை ஜ்ஞாநமென்கிறது ஸ்வயம்ப்ரகாஶத்₃ரவ்யத்வப்ரயுக்தமாய், ஜ்ஞாத்ருத்வத்துக்கு பா₃த₄கமல்லாமையாலும், ஆத்மா ஜ்ஞாதாவேயென்று பரிஹரித்தார்.

பஞ்சமாதி4கரணத்தில் — ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் 1. "ஹந்தா சேத்" இத்யாதி3 ஶ்ருதிகளாலே நிஷித்3த4மாகையாலே ஸ்வரூபமன்றென்று ஶங்கித்து, ஸ்வர்க்க3மோக்ஷாதி3ப2லஸாத4நபே3ாத4க ஶாஸ்த்ரப்ரயோஜநஸித்3த்4யர்த்த2மாக கர்த்ருத்வம் அங்கீ3கரிக்கவேண்டுகையாலும், கர்த்ருத்வ நிஷேத4ஶ்ருதி – 'ஸாம் ஸாரிக க்ரியைகள் ஸத்வரஜஸ்தமோகு3ணஸம்ஸர்க்க3க்ருதங்கள் ; ஸ்வரூபப்ரயுக் தங்களன்று' என்று சொல்லவந்ததாகையாலும், கர்த்ருத்வம் ஸ்வரூபமென்று நிர்ண யித்தார். ஷஷ்ட2ாதி4கரணத்தில் — பூர்வாதி4கரணஸித்3த4கர்த்ருத்வம் பராதீ4ந மென்று நிர்ணயித்தார். ஸப்தமாதி4கரணத்தில் — ஜீவன் ப்3ரஹ்மத்தோடு அத்யந்த பி4ந்நனுமன்று ; ப்4ராந்தப்3ரஹ்மமே ஜீவனுய் நிற்கிறதுமன்று; ஸத்யோபாத்4 யவச்சி2ந்ந ப்3ரஹ்மமே ஜீவனுயிருக்கிறதுமன்று; வஸ்துதோ ப்3ரஹ்மபி4ந்நமாய், ப்3ரஹ்மாம்ஶமாகையாலே அத்யந்தபே4த3மின்றிக்கேயிருக்கிறுன் ஜீவனென்று ஜீவஸ்வரூபத்தை நிர்ணயித்தார்.

துரீயபாத3ப்ரத2மாதி4கரணத்தில் — ஜீவோபகரணங்களான இந்த்3ரியங்க ளுக்கு ப்ரளயகாலாவஸ்த2ாந ப்ரதிபாத3ந ஶ்ருதியாலே நித்யத்வம் ஸித்3த4மென்று ஶங்கித்து, அந்த ஶ்ருதி ஸர்வஜ்ஞனை ஜக3த்காரண ப்3ரஹ்மத்தை ப்ரதிபாதி3க்கிற தொழிய இந்த்3ரியங்களைச் சொன்னதல்லாமையாலும், ஶ்ருத்யந்தரத்தில் இந்த்3ரி யோத்பத்தி கண்டோ2க்தமாகையாலும், நித்யத்வம் கூடாதென்று பரிஹரித்தார். த்3விதீயாதி4கரணத்தில் — ப்ராஸங்கி3கமாக இந்த்3ரியங்களினுடைய ஸங்க்2யா நிர்ணயம் பண்ணினுர். த்ருதீயாதி4கரணத்தில்—இந்த்3ரியங்கள் விபு4க்களாக ஶ்ருதி ப்ரதிபந்நங்களென்று ஶங்கித்து, உத்க்ராந்திஶ்ரவணத்தாலே 'விபு4க்களல்ல; அணு பரிமாணங்கள்'என்று நிர்ணயித்தார். சதுர்த்த2ாதி4கரணத்தில்-ப்ராஸங்கி3கமாகவே முக்2யப்ராணன் கேவல வாயுமாத்ரமும், உச்ச்2வாஸ நிஶ்வாஸாதி3க்ரியையுமன்று; வாயுவே அவஸ்த2ாந்தராபந்நமாய், ப்ராணனென்று பேர்பெற்றுக்கிடக்கிறதென்று நிர்ணயித்தார். பஞ்சமாதி4கரணத்தில் — உத்க்ராந்த்யாதி3 ஶ்ரவணத்தாலே ப்ராண னுக்கும் விபு4த்வம் கூடாது; அணுத்வமே முக்2யப்ராணபரிமாணமென்று நிர்ண யித்தார். ஷஷ்ட2ாதி4கரணத்தில் — ஜீவனுக்கும் அக்3ந்யாதி3 தே3வதைகளுக்கும் இந்த்3ரியாத்3யதி4ஷ்ட2ாநம் ஸ்வாதந்த்ர்யேண உண்டென்று ஶங்கித்து, பரமாத்மா தீ4நாதி4ஷ்ட2ாநமே அவர்களுக்குள்ளதென்று நிர்ணயித்தார். ஸப்தமாதி4கரணத் தில் — ப்ராணஶப்3த3 நிர்தி3ஷ்டங்களெல்லாம் இந்த்3ரியங்களென்று ஶங்கித்து, ஶ்ரேஷ்ட2 ப்ராணவ்யதிரிக்த ப்ராணங்கள் இந்த்3ரியங்களென்று நிர்ணயித்தார். அஷ்டமாதி4கரணத்தில் — ப்ரபஞ்சவ்யஷ்டிஸ்ருஷ்டி ஹிரண்யக3ர்ப்ப4கர்த்ருகமாக வேணுமென்று ஶங்கித்து, அதுவும் தச்ச2ரீரகபரமாத்மகர்த்ருகமென்று நிர்ணயித்தார்.

இப்படி பாத3த்3வயத்தாலே நிர்ணயித்த அர்த்த2த்தை "பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன், பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவறக்

கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும், கரந்தெங்கும் பரந்துளன் இவை யுண்ட கரனே"-"விஸ்த்ருதமாய், ஶைத்யஸ்வபாவமான ஸமுத்ரஜல பரமாணுக்கள் தோறும் பரிஸமாப்ய வர்த்தியாய், விஸ்த்ருதமான அண்டமென்னுமபடியாய், பூம்யாகாஶ விபாகமின்றிககே அத்யல்ப ஶரீரங்களிலும் அந்த அந்த ஶரீரங்களில் ஸ்வயமப்ரகாஶத்வேந மிளிர்ந்துகொண்டிராநின்றுள்ள ஆத்மவஸ்துக்களிலும், அந்யைரத்ருஶ்யனாய், ஸர்வபதார்த்தங்களிலும ப்ரத்யேகம் பரிஸமாப்ய வர்த்தியாய், இந்த ஜகத்தை ஸவோதரஸ்தமாக்கிககொண்டிருக்கிறன் த்ருடப்ரமாண வேதைகஸமதிகம்யனே" என்றும், "கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை, வரன வில் திறல்வலியளிபொறையாய்நின்ற, பரனடிமேல் குருகூர்ச்சடகோபன் சொல், நிரநிறையாயிரத்திவை பத்தும் வீடே" — "த்ருடமான ஆகாஶதேஜோவாயு ஜல ப்ருதிவீகதமான வரிஷ்ட ஶப்த தாஹகத்வ கமநஸாமர்த்ய ஶைத்ய க்ஷமாரூப ஜகதாகாரனாயிருக்கிற ஸர்வஸ்மாத்பரனுடைய திருவடிகளிலே ஆழ்வாரருளிச் செய்த ஶப்தார்த்த பௌஷ்கல்யத்தையுடைய ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இத்திருவாய்மொழி மோக்ஷப்ரதம்" என்றும், ஆழ்வார் இதிலொன்றரைப் பாட் டாலே ஜகத்தினுடைய ப்ரஹ்மகார்யதாஶோதந ப்ரகாரததை வெளியிட்டருளி, மேற்பாட்டுப் பாதியாலே *வீடுமின்முற்றத்தாலே வெளியிடப்படுகிற உத்தர த்விகார்த்தமான பரத்வஜ்ஞாநத்தினுடைய மோக்ஷஸாதநத்வத்தையும் உப க்ஷேபித்தருளுகிறராதல், பூர்வத்விக ப்ரதிபாத்யமான பரத்வவிஷயம் இத்திருவாய் மொழியென்று இத்திருவாய்மொழி ப்ரதிபாத்யார்த்தத்தை புத்திஸௌகர் யார்த்தமாக ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறராதல்.

இனி, வியத்பாத ப்ரதமாதிகரணநிர்ணீதாகாஶோத்பத்தி, "நிலவிசும் பொழிவற" என்று—ப்ருதிவ்யாதிகள்போலே ஆகாஶமும் ப்ரஹ்மகார்யமென்று அருளிச்செய்கையாலே ஸித்திக்கிறது. இன்னமும் 1. **"ஆகாஶஸ்ஸம்பூத:"** என்கிற தைத்திரீய ஶ்ருதியிலே ஆகாஶோத்பத்தி சொல்லியிருக்கையாலே, சாந்தோக்யத்திலும் வியதுத்பத்தி, ஸர்வஶாகாப்ரத்யயந்யாயத்தாலே வரு மென்கிற அர்த்தமும், பூமி ஆகாஶம் என்கிற விஶேஷமின்றிககே, பூமி போலே ஆகாஶமும ப்ரஹ்மகார்யமென்று சொல்லுகிற இச்சந்தையாலே ஸூசித மாகிறது. அதெங்ஙனேயென்னில், ஆகாஶோத்பத்தி கதநத்தாலே தைத்திரீய ஶ்ருத்யர்த்தம் தோற்றி, அம்முகேந வியதுத்பத்யவசநஶ்ருதிநிர்வாஹமும் தோற்றுகையாலே ஸூசிதம். ஆக இவை எல்லாவற்றாலும், இச்சந்தை ப்ரத மாதிகரணார்த்தமென்னக் குறையில்லை. த்விதீயாதிகரணேக்தமான—அநந்தர பூர்வகாரணமான கேவலாகாஶாதிகளில்நின்றும் அவ்யவஹிதாநந்தர வாய்வாதிகள் உத்பந்நமாகமாட்டாதென்று நிர்ணயித்த—அர்த்தமும், ஸர்வதத்வங்களுக்கும் ப்ரஹ்மகார்யத்வ ப்ரதிபாதநம் பண்ணுகிற "பரந்த தண் பரவையுள்" என்று தொடங்கி முழுக்க இப்பாட்டாலே அறிவிப்பித்தமை அதிஸ்புடமாயிருக்கிறது.

த்ருதீயாதி$_4$கரணோக்தமான ஜீவோத்பத்தி நிஷேத$_4$மும் "இடந்திகழ்பொருள் தொறும்" என்கிற இச்சந்தையாலே ஸூசிதம்; அதெங்ஙனேயென்னில்; "இடந் திகழ்" என்று ஆத்மதத்வத்துக்கு வ்யாபகத்வம் சொல்லுகையாலே, வ்யாப்ய பதா$_2$ர்த்த$_2$ங்களினாலே நஶிப்பிக்கப்படாதென்று ஸித்$_3$தி$_4$க்கும. இவ்வர்த்த$_2$த்தைப் பரமபுருஷன்தானே 1. "அவிநாஶி து தத்$_3$வித்$_3$தி$_4$ யேந ஸர்வமித$_3$ம் ததம்। விநாஶ மவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித் கர்த்துமர்ஹதி॥" என்று வெளியிட்டருளினான். இந்த ஶ்லோகத்தை 2. "ஆத்மநஸ்த்வவிநாஶித்வம் கத$_2$மித்யத்ராஹ (அவிநாஶிது இதி) தத் - ஆத்மதத்வம் அவிநாஶீதி வித்$_3$தி$_4$; யேந - ஆத்மதத்வேந சேதநேந, தத்$_3$வ்ய திரிக்தமித$_3$ம் அசேதநதத்வம் ஸர்வம் ததம் - வ்யாப்தம்; வ்யாபகத்வேந நிரதிஶய ஸௌக்ஷ்மத்வாத$_3$த்மநோ விநாஶாநர்ஹஸ்ய தத்$_3$வ்யதிரிக்தோ ந கஶ்சித் பதா$_3$ர்த்தோ$_2$ விநாஶம் கர்த்துமர்ஹதி; தத்$_3$வ்யாப்யதயா தஸ்மாத் ஸ்தூ$_2$லத்வாத்; நாஶகம் ஹி ஶஸ்த்ரஜலாக்$_3$நிவாய்வாதி$_3$கம் நாஶ்யம் வ்யாப்ய ஶிதி$_2$லீகரோதி; முத்$_3$க$_3$ராத$_3$ யோऽபி ஹி வேக$_3$வத்ஸம்யோகே$_3$ந வாயுமுத்பாத்$_3$ய தத்$_3$த்$_3$வாரேண நாஶயந்தி; அத: ஆத்மதத்வம்அவிநாஶி" என்று ப$_4$ாஷ்யகாரரும் வ்யாக்$_2$யாநம் செய்தருளினர். இப்படி ஜீவனுடைய வ்யாபகத்வகத$_2$நத்தாலே ஜீவனுடைய நித்யத்வம் ஸித்$_3$தி$_4$க்கை யால், த்ருதீயாதி$_4$கரணப்ரமேயம் இச்சந்தையென்னக் குறையில்லை.

சதுர்த்த$_2$ாதி$_4$கரண நிர்ணீதமான ஜீவனுடைய ஜ்ஞாத்ருத்வமும், "திகழ் பொருள்தொறும்" என்கிற சந்தையாலேதானே ஸூசிதமாகலாம்; அதெங்ஙனே யென்னில்; "திகழ்பொருள்" என்கிற இதுக்கு—'ஜ்ஞாநத்வாஶ்ரயமான வஸ்து' என்றிறே அர்த்த$_2$ம். இனி ஸாக்ஷாத்பரம்பரௌத$_3$ாஸீங்யோக ஜ்ஞாநத்வாஶ்ரய மென்னும்போது ஜ்ஞாத்ருத்வமும் ஸ்வரூபமென்று ஸித்$_3$தி$_4$க்கும்; ஆனால் 'ஜ்ஞாதா' என்றருளிச்செய்யாதே "திகழ்பொருள்" என்று ஜ்ஞாநத்$_3$ரவ்யம் என்றருளிச் செய்கைக்கு அடியென்னென்னில், ஜ்ஞாதாவென்றால் ஜ்ஞாநகு$_3$ணகத்வமாத்ரம் தோற்றுமொழிய ஜ்ஞாநஸ்வரூபத்வம் தோற்றுமையாலே, உப$_4$யமும் தோற்றுகைக் காக இங்ஙனே அருளிச்செய்தாராமித்தனை; ஜ்ஞாநபத$_3$த்துக்கு உப$_4$யபரத்வம் உண்டென்னுமிடம் ஜங்மாதி$_4$கரணத்தில் 3. "ஸத்யம் ஜ்ஞாநம்" என்கிற ஶ்ருதி வ்யாக்$_2$யாந ஶ்ருதப்ரகாஶிகையிலே ஸுதீ$_4$க்களுக்கு ஸுவ்யக்தமாக அறியலாம். § "ஜ்ஞாதாவென்றபோதே கர்த்தா போ$_4$க்தா என்னுமிடம் ஸித்$_3$த$_4$ம்" என்று ஜக$_3$த்$_3$ கு$_3$ருவான பிள்ளை அருளிச்செய்த க்ரமத்திலே ஜ்ஞாத்ருத்வகத$_2$நத்தாலே கர்த் ருத்வமும் ஸூசிதமாகையால்,ஜீவகர்த்ருத்வ ப்ரஸாத$_4$நமபண்ணின பஞ்சமாதி$_4$கரண ப்ரமேயமும், "திகழ்பொருள்தொறும்" என்கிற இச்சந்தையாலே ஸூசிதமாகிறது.

ஷஷ்ட$_2$ாதி$_4$கரணோக்தமான ஜீவனுடைய ப$_4$க$_3$வத$_3$தீ$_4$ந கர்த்ருத்வ ப்ரஸாத$_4$நமும், "திகழ்பொருள்தொறும் கரந்தெங்கும் பரந்துளன்" என்று ஜீவனுடைய பராதீ$_4$ங்யோபயுக்த – அந்த:ப்ரவேஶோபலக்ஷித – நியமநகத$_2$நத்தாலே ஸூசித

.. த்வத்ரயம் 29.

ஶமாகிறது. ஜீவனுடைய கர்த்ருத்வம் பராதீ₄நமாகிறது பரமாத்மாவினுடைய அந்த:ப்ரவிஶ்ய நியமநத்தாலேயென்று ஹ்ருதீ₃கரித்து 1. **"பராத்து தச்ச்₂ருதே:"** என்கிற ஸூத்ரத்திலுள்ள ஶ்ருதிபத₃த்துக்கு 2. **"அந்த: ப்ரவிஷ்ட:"** இத்யாதி ஶ்ருதிகளை ப₄ாஷ்யகாரர் விஷயமாக உத₃ாஹரித்தருளினர். ஸப்தமாதி₄கர[3]ணேக்தமான 'ஜீவவஸ்து ப்₃ரஹ்மவிஶேஷணத்வேந ப்₃ரஹ்மபி₄ந்நமுமாய், ஸ்வநிஷ்ட₂மின்றிக்கேயொழிகையாலே அத்யந்தபி₄ந்நமுமன்றிக்கேயிருக்கும்'என்கிற பொருள் "இடந்திகழ் பொருள்தொறும் கரந்தெங்கும் பரந்துளன்" என்று வ்யாப்ய வ்யாபகப₄ாவரூப ஶரீராத்மப₄ாவ ப்ரதிபாத₃நத்திலே ஸ்பு₂டமாக அறியலாம்.

துரீயபாத₃ த்₃விதீய த்ருதீய சதுர்த்த₂ பஞ்சம ஷஷ்ட₂ ஸப்தமாதி₄கரணங்களில் இந்த்₃ரிய ஸங்க்₂யாதி₃ நிரூபணம் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகையாலே, அத்தை உபேக்ஷித்து, அவஶிஷ்ட ப்ரத₂மாஷ்டமாதி₄கரண நிரூபிதார்த்த₂ங்களை வெளியிட்டருளுகிறோர். ப்ரத₂மாதி₄கரணத்தில்—இந்த்₃ரியங்களுடைய நித்யத்வம், இந்த்₃ரியங்களுக்கு ப்ரளய காலாவஸ்த₂ாந ப்ரதிபாத₃க ஶ்ருதியாலேயென்று ஶங்கித்து, 'அந்த ஶ்ருதி - பரமாத்மாவினுடைய ப்ரளயகாலாவஸ்தை₂யைச் சொல்லவந்ததொழிய இந்த்₃ரியங்களுடைய நித்யத்வத்தைச் சொல்லவந்ததன்று' என்று நிர்ணயித்த அர்த்த₂ம், பரமாத்மாவினுடைய ப்ரளயகாலஸ்தி₂தியை ப்ரதிபாதி₃க்கிற "இவையுண்ட கரனே" என்கிற சந்தையாலே சொல்லப்பட்டதென்று அறியலாம். அஷ்டமாதி₄கரணத்தில்—வ்யஷ்டிஸ்ருஷ்டி கர்த்தா சதுர்முக₂னல்லன் ; ஸமஷ்டிஸ்ருஷ்டி கர்த்தாவான பரமாத்மாவேயென்று நிர்ணயித்த அர்த்த₂மும், "கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை வரனவில் திறல் வலியளிபொறையாய் நின்ற பரன்" என்று வ்யஷ்டிஸமஷ்டிஸாத₄ாரண்யேந ஸர்வஜக₃த்தும் ப்₃ரஹ்ம கார்யமென்கிற இச்சந்தையாலே அதிஸ்பு₂டமாக அறியலாம்.

ஆனல் இச்சந்தைகளில் அநுப்ரவேஶகத₂நத்தாலும் ஸாமாநாதி₄கரண்ய நிர்தே₃ஶத்தாலும் ஶரீராத்மப₄ாவம் தோற்றுமொழிய கார்யகாரணப₄ாவம் தோற்ருமையால் இச்சந்தைகள் வியத₃ாதி₃களினுடைய ப்₃ரஹ்மகார்யதா ப்ரகாரஶோத₄ந பராதி₄கரணங்களுக்கு ஸங்க்₃ராஹகங்களானபடி எங்ஙனேயென்னில்; 3. **"அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய"** 4. **"தத் ஸ்ருஷ்ட்வா, தநே₃வாநுப்ராவிஶத்"** இத்யாதி₃ ஶ்ருதிகளில் அநுப்ரவேஶ பூர்வகமாக ஸ்ருஷ்டி உக்தையாகையாலே, கேவல ஸ்ருஷ்டி ப்ரதிபாத₃நஸ்த₂லங்களில் அநுப்ரவேஶமும், கேவலாநுப்ரவேஶப்ரதிபாத₃ந ஸ்த₂லங்களில் ஸ்ருஷ்டியும், ஸர்வஶாக₂ாப்ரத்யயந்யாயத்தாலே விவக்ஷிதமென்று ப₄ாஷ்யாதி₃களில் நிர்ணீதமாகையாலே, அநுப்ரவேஶாக்ஷ்யா ஸ்ருஷ்டியும் ஸித்₃த₄மென்று, இச்சந்தைகள் ஸங்க்₃ராஹகங்களாகலாம். ஆகையாலே, பத்தாம் பாட்டுக்கும் நிக₃மநப்பாட்டுக்கும் த்₃விதீயலக்ஷண த்ருதீயதுர்யபாத₃ங்களோடே ஐகமத்யமுண்டென்னுமிடம் ஸித்₃த₄ம். **இப்படி பூர்வத்₃விகப்ரதிபாத்₃யமான ப்₃ரஹ்ம காரணத்வ — அப₃ாத்₄யத்வங்களை ஆழ்வாரும் முதல் திருவாய்மொழியாலே வெளி**

யிட்டருளினமை வேதா₃ந்தத்₃வய ஸம்ப்ரதா₃யமுடையவர்க்குத் தெளியலாம்படி தி₃ங்மாத்ரேண த₃ர்ஶிதமாயிற்று.

ஶாரீரகோத்தரத்₃விகத்துக்கும் * வீடுமின் முற்றத்துக்கும் ஐகமத்யமுண்டாம் படி எங்ஙனேயென்னில்; உத்தரத்₃விகத்தில் ப்ரதிபாத்₃யமான ஸாத₄ந தத் ப₂லங்களை இத்திருவாய்மொழியிலும் பரோபதே₃ஶமுகேந வெளியிடுகையாலே ஐகமத்யமுண்டு. ஆனால் நம்பிள்ளை இத்திருவாய்மொழி த்ருதீயாத்₄யாய ப்ரதி பாத்₃யமான உபாஸநபரமென்று அருளிச்செய்தாரொழிய த்ருதீயதுர்யாத்₄யாய ப்ரதிபாத்₃யமான உபாயோபேயபரமென்று அருளிச்செய்யாதொழிவானென் னென்னில்; உபாஸநஶப்₃த₃ம ப₂லத்துக்கும் ப்ரத₃ர்ஶநார்த்த₂மென்று அருளிச் செய்தார். யத்₃வா, இந்த உபாஸநஶப்₃த₃ம லக்ஷணையாலே ஜ்ஞாந ஸாமாந் யத்தைச் சொல்லுகிறது; மோக்ஷஸாத₄நீபூ₄தோபாயமும் ப₂லரூப ப்₃ரஹ்மாநு ப₄வமும் ஜ்ஞாநாவஸ்தா₂விஶேஷமாகையாலே இரண்டையும் இஶ்ஶப்₃த₃த்தாலே ஸங்க்₃ரஹித்தருளினரென்றும் காணலாம்; இவ்விரண்டும், ஜ்ஞாநாவஸ்தா₂விஶேஷ மென்னுமிடத்தை ரஹஸ்யத்ரய ஸாரத்திலே "இவர்களுக்குக் கர்த்தவ்யமான உபாய மாவது-ஒரு ஜ்ஞாந விகாஸவிஶேஷம். இத்தாலே ஸாத்₄யமாய் ப்ராப்திரூபமான உபேயமாவதும் - ஒரு ஜ்ஞாந விகாஸ விஶேஷம்; இவற்றில் உபாயமாகிற ஜ்ஞாந விகாஸ விஶேஷம், கரணஸாபேக்ஷமாய், ஶாஸ்த்ரவிஹிதமுமாய், ஸத்யத்வாதி₃க ளான ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களோடே கூடின அவ்வோ வித்₃யாவிஶேஷ ப்ரதி நியதகு₃ணாதி₃களினாலே நியதப்₃ரஹ்மவிஷயமுமாயிருக்கும்; உபேயமாகிற ஜ்ஞாந விகாஸ விஶேஷம் கரண நிரபேக்ஷமுமாய், ஸ்வபா₄வப்ராப்தமுமாய், கு₃ணவிபூ₄த் யாதி₃களெல்லாவற்றாலும் பரிபூர்ண ப்₃ரஹ்ம விஷயமுமாயிருக்கும்" என்று உபாய விபா₄கா₃தி₄காரத்திலே வேதா₃ந்தாசார்யர் அருளிச்செய்தார்.

அத₂வா "வீடுசெய்ம்மினே" என்று தொடங்கி "திண்கழல் சேரே" என்னு மளவும் மோக்ஷோபாயத்தைப் பாட்டுக்கள்தோறும் வாக்யார்த்த₂தயா ப்ரதா₄நமா யும் தத₃ங்க₃தத்ப₂லங்களை பதா₃ர்த்த₂தயா அப்ரதா₄நமாயும் ஆழ்வாரும் அருளிச் செய்கையாலே 1. **"ஸ்வர்க்க₃காமோ யஜேத"** என்கிறவிடத்தில் ஸ்வர்க்க₃ஸாத₄நம் வாக்யார்த்த₂தயா ப்ரதா₄நமாய், ஸ்வர்க்க₃ம் பதா₃ர்த்த₂தயா அப்ரதா₄நமாயிருக்கிறத் தைப் பற்ற இவ்வாக்யத்தை ஜ்யோதிஷ்டோமரூப ஸாத₄நபரமென்று அபி₄யுக் தர்கள் வ்யவஹரிக்கும் க்ரமத்திலே நம்பிள்ளையும் வ்யவஹரித்தருளினர். ஆகை யால் ப₂லப்ரதிபாத₃நம் உபஸர்ஜநதயா ஆழ்வாரருளிச்செய்தமை நம்பிள்ளைக்கும் விவக்ஷிதமாகையாலே, "உபாஸநபரம் வீடுமின்முற்றவும்" என்கிற ஸ்ரீஸூக்தி யோடு, 'உபாயோபேய ப்ரதிபாத₃க ஶாரீரகோத்தரத்₃விக ஸமாநார்த்த₂ம் இத் திருவாய்மொழி' என்கிற ப்ரமேயத்துக்கு விரோத₄மில்லை. இதில் முதற்பாட்டு த்ருதீயலக்ஷண ப்ரத₂ம பாத₃ார்த்த₂மாகவும, இரண்டாம் பாட்டும் மூன்றும் பாட்டும் த்₃விதீய பாத₃ார்த்த₂மாகவும், நாலாம்பாட்டு தொடங்கி மேல் நாலுபாட்டும்

கு₃ணோபஸம்ஹார பாத₃ார்த்த₂மாகவும், எட்டாம்பாட்டு அங்க₃பாத₃ார்த்த₂மாகவும் இப்படி முதலெட்டுபாட்டு த்ருதீயாத்₄யாயார்த்த₂மாகவும், ஒன்பதாம்பாட்டும் பத்தாம்பாட்டும் சதுர்த்த₂ாத்₄யாய பாத₃சதுஷ்டயார்த்த₂மாகவும், இப்படி பத்து பாட்டும் உத்தரத்₃விகார்த்த₂மாயிருக்கும். நிக₃மநப்பாட்டு இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதி₃தமான ப₄க₃வத₃பி₄க₃ம்யத்வ ப்ராப்யத்வாநுப₃ந்தி₄ ஸௌலப்₄யாதி₃ கு₃ணங்களுக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கும்.

இதில் வைராக்₃யபாத₃ ப்ரத₂மபாத₃ப்ரத₂மாதி₄கரணத்திலே—ஜீவன் ஸுக்ருத கர்மப₂லாநுப₄வார்த்த₂ம் தே₃ஹாத்₃தே₃ஹாந்தரப்ரவேஶம் பண்ணும்போது அவ் விடங்களிலும் தே₃ஹாரம்ப₄க பூ₄த ஸூக்ஷ்மங்கள் லபி₄க்கையாலே, பூர்வதே₃ஹஸ்த₂ பூ₄தஸூக்ஷ்ம ஸம்பரிஷ்வக்தனாய்ப் போகவேண்டினமை இல்லையென்று ஶங்கித்து, பஞ்சாக்₃நிவித்₃யோக்த ப்ரக்ரியையாலே பூர்வதே₃ஹஸ்த₂ பூ₄தஸூக்ஷ்ம ஸம்பரிஷ் வக்தனாய், தே₃ஹாத் தே₃ஹாந்தரப்ரவேஶம்பண்ணுகிறானென்று நிர்ணயித்தார். இந்த அதி₄கரணத்தில் காத₃ாசித்கமாயாகிலும் பூ₄தஸூக்ஷ்ம பரிஷ்வங்க₃மின்றிக்கே நிர்து₃:க்க₂னாயிருக்கைக்கும் அவகாஶமில்லையென்று வைராக்₃ய ஜநநார்த்த₂மாக யாவந்மோக்ஷம் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் அவர்ஜநீயமென்று நிஷ்க்ருஷ்டமாயிற்று. கிஞ்ச, 1. **"ப₄ாக்தம் வாऽநாத்மவித்த்வாத்"** என்கிற ஸூத்ரத்தாலே தே₃வப்₄ருத்யப₄ாவத்தை அவலம்பி₃த்து தத்ப்ரயுக்தக்லேஶ கரம்பி₃தமாயிருக்கிற ஸ்வர்க்க₃பே₄ாக₃ாநுப₄வத்தினுடைய க்ஷயிஷ்ணுத்வமும் ஸாதிஶயத்வமும் ஆவிஷ்க்ருதம். த்₃விதீயாதி₄கரணத்தில்—ஸ்வர்க்க₃ாநுப₄வாநந்தரம், ஜீவனானவன் க்ருத்ஸ்ந கர்மப₂லமும் பு₄க்தமாகையாலே கர்மஸம்ப₃ந்த₄மற்றே இழிகிறானென்று ஶங்கித்து, ரமணீயசரணர்கள் ரமணீயயோநியை அடைவர்கள்; கபூ₄யசரணர்கள் குத்ஸிதயோநியை அடைவர்களென்று ஶ்ருதிசொல்லுகையாலே, கர்மஸம்ப₃ந்த₄முடையனாயே இழிகிறானென்று நிர்ணயித்தார்; இதிலும் ஸூக்ஷ்மதே₃ஹத்துக்கும் காரணதயா ஸகல ஸம்ஸார நித₃ாநகர்மஸம்ப₃ந்த₄ம் முக்திபர்யந்தம் அநுவ்ருத்தமாயிருக்கிறதென்று ஸம்ஸார தோ₃ஷம் உக்தமாயிற்று.

த்ருதீயாதி₄கரணத்தில் — அநிஷ்டாதி₃காரிகளான பாபகர்மாக்களுக்கும் சந்த்₃ரப்ராப்தி உண்டென்று ஶங்கித்து, இஷ்டாபூர்த்தாதி₃ ஸத்கர்மரஹிதர்களுக்கு பித்ருயாணமார்க்க₃த்தாலே க₃மநமில்லாமையாலே சந்த்₃ரப்ராப்தியில்லை என்று நிர்ணயித்தார். இதிலும்—'க்₃ராமம் க₃ச்ச₂ந் வ்ருக்ஷமூலாந்யுபஸர்ப்பதி' என்ற ந்யாயத்தாலேயாகிலும் ஸ்வர்க்க₃ப்ராப்தியில்லை; யமஸத₃நத்திலேயும் ரௌரவாதி₃நரகங்களிலும் மிகவும் யாதநாநுப₄வமும் கீடாதி₃ஜந்ம ப்ராப்தியுமுண்டென்று ஸம்ஸாரதோ₃ஷம் வ்யக்தமாகக் கீர்த்திதமாயிற்று. சதுர்த்த₂ாதி₄கரணத்தில்—ஶ்ருதிஸித்₃த₄மான ஆகாஶாதி₃ப₄ாவம் ஜீவனுக்கு தே₃வமநுஷ்யாதி₃ப₄ாவம்போலே தச்ச₂ரீரத்வரூபமென்று ஶங்கித்து, ஆகாஶாதி₃ ப்ராப்தியிலே ஸுக₂து₃:க்க₂ாநுப₄வமில்லாமையாலே தத்ஸாம்யாபத்தியொழிய தச்ச₂ரீரத்வமில்லையென்று நிர்ணயித்

தார்; இதிலும் ஸ்வர்க்கா3வரோஹணம்பண்ணுமவர்களுக்கு ஆகாஶாதி3பா4வ ஶ்ரவணத்தாலே தத3பி4மாநிதே3வதைகளைப்போலே ஆகாஶாதி3ஶரீரத்வ ப்ரயுக்தமான சில தி3வ்யபோ4க3ங்களுண்டென்கிற ஶங்காநிவ்ருத்த்யர்த்த2மாக ஆகாஶாதி3 ஸம்ஶ்லேஷமாத்ரமேயுள்ளதென்று சொல்லுகையாலே தோ3ஷகீர்த்தநம் ஸ்பு2டம்.

பஞ்சமாதி4கரணத்தில் — 'ஆகாஶவாயு தூ4மாப்4ரமேக4வர்ஷ ப்ராப்தியுண்டாம்போது அவ்வோவிடங்களில் அதிஶீக்4ரமாக ஜீவனுக்கு க3மநமுண்டென்கிற நியமமில்லை; தத்3தே4து இல்லாமையாலே' என்று ஶங்கித்து, உத்தரத்ர வ்ரீஹ்யாதி3 ப்ராப்தியிலே 1. "அதோ வை து3ர்நிஷ்ப்ரபதரம்" என்று விஶேஷித்து க்ருச்ச்2ர நிஷ்க்ரமணம் சொல்லுகையாலே ஆகாஶாதி3 ப்ராப்தியிலே அசிரநிஷ்க்ரமணமே உள்ளதென்று நிர்ணயித்தார். இதிலும் ஆகாஶாத்3யவஸ்தா2நவிளம்ப3நியம நிரஸநவ்யாஜேந வ்ரீஹ்யாதி3களில ஸுக2போ4க3மற்று, அசிரவஸ்தா2நரூப தோ3ஷம் த்3ருட4மாயிற்று; ஷஷ்டா2தி4கரணத்தில்—ஸ்வர்க்கா3வரோஹணம் பண்ணுகிற ஜீவர்கள வ்ரீஹ்யாதி3 ஶரீரதயா ஜநிக்கிறார்களென்று ஶங்கித்து, வ்ரீஹ்யாதி3 ஜந்மஹேதுபூ4தகர்மவிஶேஷம் அஶ்ருதமாகையாலே, அந்யஜீவாதி4ஷ்டி2த வ்ரீஹ்யாதி3களில ஸம்ஶ்லேஷமாத்ரமேயுள்ளதென்று நிர்ணயித்தார். இதிலும், வ்ரீஹ்யாதி3பா4வேந ஜநநமென்னும்போது தல்லவநபர்யந்தமாத்ரமே து3:க்க2ம் உக்தமாம. அங்ஙனன்றிக்கே, ஸம்ஶ்லேஷமாத்ரமென்று நிர்ணயித்தவித்தாலே ஶோஷண குஸூலாவஸ்தா2பந அவஹநந ப2லீகரண பாக ப4க்ஷணாதி3 த3ஶைகளிலும் அநுவ்ருத்தி ஸித்3தி4க்கையாலும்,ப4க்ஷணவிஷயமன்றிக்கேயிருக்கிற வ்ரீஹ்யாதி3களிலும் பரிணமபரம்பரயா ஸம்ஶ்லேஷம் ஸித்3தி4க்கையாலும், தோ3ஷகீர்த்தநம் அதிஸ்பு2டம். இப்படி ஶாரீரகத்தில் ஷட்3தி4கரணியான இப்பாத3த்தாலே ப4க3வதா3ஶ்ரயணோபயுக்த வைராக்3ய ஸித்3த்4யர்த்த2மாக நிரூபித்த அர்த்த2த்தை— ஆழ்வார் "வீடுமின் முற்றவும், வீடுசெய்து உம்முயிர், வீடுடையானிடை, வீடு செய்ம்மினே"—"ஐஹிகாமுஷ்மிக ஸகல விஷயங்களையும் அதிஹேயமென்று அத்4யவஸித்து, அதில் போ4க்3யதாபு3த்3தி4யை விடுங்கோள். இப்படி விட்டுப் பரமபத3 நிலயனை ஸர்வேஶ்வரன் விஷயத்தில் ஆத்மஸமர்ப்பணம் பண்ணுங்கோள்" என்று பரப்பற்று ஸுக்3ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் மந்த3மதிகளுக்கும் தெளியலாம்படி ஒரு சொல்லாலே அருளிச்செய்தார்.

இனி, ஸூத்ரகாரர் பரக்கச் சொன்னத்தை இவர் ஒரு சொல்லாலே அருளிச்செய்வானென்னென்னில்; A"ஏ பாவம் பரமே" என்கிறபடி நிரந்தர ப4க3வத3நுப4வம் பண்ணுகிற இவருக்குப் பரக்க ஸம்ஸார தோ3ஷகீர்த்தநமும் அஸஹ்யமாய்த் தோற்றுகையாலும் B"நலகுரவும் செலவும்"என்கிற திருவாய்மொழிப்படியே ஸர்வபதா3ர்த்த2ங்களும ப்3ரஹ்மாத்மகதயா போ4க்3யமாகத் தோற்றச்செய்தேயும்,

A 2-2-2. B 6-3.

ஸம்ஸாரிகள்பக்கல் க்ருபையாலே, அவர்கள் பாகாநுகுணமாகத் தமக்குத் தோற்றுத தோஷத்தையும் சொல்ல வந்தவராகையாலும், "முற்றவும் வீடுமின்" என்று அக்ராம்யமாக புஹ்வதிகரண ஸித்தார்த்தத்தையும் சாதுர்யத்தாலே அருளிச்செய்ய வந்தவராகையாலும், இப்படி ஒரு சொலலாலே வெளியிட்டருளினர். ஆனல இப்பாதார்த்தமான வைராக்யமாத்ரத்தை விதிக்கவேணு மொழிய பாதாந்தரார்த்தமான உபாயஸ்வீகாரத்தை விதிப்பானென்னென்னில்; வைராக்யத்துக்கு உபாயாங்கத்வ ஸூசநார்த்தமாக அருளிச்செய்தாராமித்தனே; பக்த்யுபாயத்துக்கு விஷய வைராக்யமும், ப்ரபத்த்யுபாயத்துக்கு உபாயாந்தர வைராக்யமும் அங்கமிறே. இதுக்குள்ள அங்காங்கிபாவத்தை "வீடுசெய்து" என்று ல்யப்பாலே அருளிச்செய்தார்; **ஆகையால் இப்பாட்டுக்கும் இப்பாதத்துக்கும் ஐகமத்யம் ஸித்தம்.**

த்விதீயபாத ப்ரதமாதிகரணத்தில்—ஸ்வாப்நஸ்ருஷ்டிப்ரகரணத்தில் ஜீவன் ஸங்நிஹிதனகையாலே தத்ஸ்ருஷ்டி ஜீவகர்த்ருகையென்று ஶங்கித்து, ஸம்ஸார தஶையில் ஸ்ரஷ்ட்ருத்வோபயுக்த ஸத்யஸங்கல்பத்வாதிகள் கர்மதிரோஹித ஸ்வரூபனன ஜீவனுக்குக கூடாமையாலே ஸ்வாப்நஸ்ருஷ்டி ஜீவகர்த்ருகையன்று, பரமாத்ம கர்த்ருகை என்று நிர்ணயித்தார். த்விதீயாதிகரணத்தில் — நாடிகளென்ன, புரீதத்ப்ரதேஶமென்ன, ப்ரஹ்மமென்ன இவை மூன்றும் நைரபேக்ஷ யேண ஸுஷுப்திஸ்தாநத்வேந ஶ்ருதமாகையாலே, தத்ஸ்தாநத்வம் விகல்பேந வருகிறதென்று ஶங்கித்து, ப்ராஸாத கட்வா பர்யங்கங்கள்போலே கார்யபேதேந ஸமுச்சயமே கூடும்படியாகவிருக்க, பாக்ஷிகபாதகார்ப்பவிகல்பம் அயுக்தமாகை யாலே, ஸமுச்சயமே யுக்தமென்று நிர்ணயித்தார். த்ருதீயாதிகரணத்தில்—"ஸுப்தனே ப்ரபோதகாலத்திலே உத்திதனகிறுனென்னவொண்ணுது; ஸுஷுப்தனுக்கு ஸர்வோபாதிவிநிர்மோக பூர்வகப்ரஹ்மஸம்பத்தி வருகையாலே" என்று ஶங்கித்து, ஸுஷுப்திக்கு முன்னே ஆரப்தமான கர்மம், உத்திதனலே ஸமாபநம் பண்ணப் படுகையாலும், ஸோऽஹமென்று ஸுப்தனே உத்திதனென்று ப்ரத்யபிஜ்ஞை வருகையாலும் இத்யாதியுக்திகளாலே ஸுப்தனுககே உத்திதத்வம ஸமர்த்தித் தார். சதுர்த்தாதிகரணத்திலே—மூர்ச்சை-ஸர்வேந்த்ரிய ப்ராணவ்யாபாரோபரதி தஶையாயிருக்கையாலே மரணமென்று ஶங்கித்து, ஆகாரவைரூப்யத்தாலே ஸூக்ஷ்மப்ராணஸ்திதவம அவகதமாகையாலே,மரணய அர்த்தஸம்பத்தி-மூர்ச்சை என்று நிர்ணயித்தார். பஞ்சமாதிகரணத்தில் — ஜீவனுக்குப்போலே பரமாத்மா வுக்கும் ஜாக்ராதி ஸர்வாவஸ்தைகளிலும் அவஸ்தாநம் உக்தமாகையாலே, தத்ப்ர யுக்ததோஷங்கள் ஸம்பவிக்குமென்று ஶங்கித்து, ஸர்வாவஸ்தாவஸ்திதமான ப்ரஹ்மத்துக்கு அகிலஹேய ப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வமாகிற உபய லிங்கம் ஶ்ருதி ஶதஸமதிகதமாகையாலே, தத்ப்ரயுக்த தோஷங்கள் ஸம்பவியா தென்று நிர்ணயித்தார். ஷஷ்டாதிகரணத்தில் — அசித்வஸ்துரூபேண பரிணதம்

ப்₃ரஹ்மந்தானுகவேணும. அன்றிக்கே, "ப்₃ரஹ்மத்திலும் அசித்₃வஸ்துவிலும் ஏக ஜாதியோக₃த்தாலே ஐகஜாதிகவஸ்துதானுகவேணும். பி₄ந்நாபி₄ந்நத்வோப₄யவ்யப தே₃ஶம கூடவேண்டுகையாலே" என்று ஶங்கித்து, 1. "அம்ஶோ நாநாவ்யபதே₃ஶாத்" என்கிற அதி₄கரணந்யாயேந ஜீவனுக்குப்போலே ஶரீராத்மபா₄வ முண்டாய், அத்தாலே பி₄ந்நாபி₄ந்நத்வ வ்யபதே₃ஶம் கூடுகையாலே, அசித்₃வஸ்து ப்₃ரஹ்மஶரீரமென்று நிர்ணயித்தார். ஸப்தமாதி₄கரணத்தில்—ஜக₃ஜ்ஜந்மாதி₃காரண தயா த்₃ருஷ்டபரப்₃ரஹ்மவஸ்துவிலும் பரவஸ்து, ஸேதுந்மாந ஸம்ப₃ந்த₄பே₄த₃ வ்யபதே₃ஶங்களாலே உண்டென்று ஶங்கித்து, காரணவஸ்துவிற்காட்டில் வஸ்த் வந்தரத்துக்குப் பரத்வம் - 2. "யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித்" இத்யாதி₃ ஶ்ருதி நிஷித்₃த₄மாகையாலும், ஸேதுத்வவ்யபதே₃ஶம் ஸர்வலோகாऽஸாங்கர்யஹேதுத்வ ப்ரயுக்தமாகையாலும், அபரிச்சி₂ந்ந வஸ்துவுக்கு உந்மாநவ்யபதே₃ஶம் உபாஸ நார்த்த₂மாகையாலும், ஸம்ப₃ந்த₄வ்யபதே₃ஶம் தனக்கே ப்ராப்யத்வ ப்ராபகத்வ ப்ரயுக்தமாகையாலும்,"ததோ யது₃த்தரதரம்"என்கிற ஶ்ருதிக்கு பே₄த₃வ்யபதே₃ஶம் அர்த்த₂மல்லாமையாலும், ஜக₃த்காரணவஸ்துவிலும் பரவஸ்துவில்லையென்று நிர்ணயித்தார். சரமாதி₄கரணத்தில் — யாக₃ தா₃ந ஹோமோபாஸநாதி₃ வைதி₃க கர்மங்கள் க்ஷணத்₄வம்ஸிகளாகிலும், தஜ்ஜந்யாபூர்வத்₃வாரா பே₄ராக₃பவர்க₃ரூப ஸர்வப₂லஸாத₄நங்களென்று ஶங்கித்து, கர்த்தவ்யதயா அவக₃தயாகோ₃பாஸநாதி₃ களுக்கும் ப₂லப்ரத₃ன் பரமபுருஷனேயென்று ஶ்ருதிஸ்ம்ருதி ஸித்₃த₄மாகையாலே, பரமபுருஷனே ப₂லப்ரத₃னென்று நிர்ணயித்தார். இப்பாத₃த்தில் முந்துற அதி₄கரண சதுஷ்டயத்தாலே — ஏதத்₃தே₃ஹமாத்ரானுப₃த்₃த₄ ஸ்வப்நபதா₃ர்த்த₂கர்த்ருத்வ ஸுஷுப்தி ஸ்த₂நாதி₃ நிரூபணமுகே₂ந ப்ரத₂மபாத₃ நிரூபித-இஹாऽமுத்ரஸஞ்சார த₃ஶாநுவ்ருத்ததோ₃ஷ வ்யதிரிக்த தோ₃ஷங்கள் வைராக்₃ய ஸித்₃த்₄யர்த்த₂ம் உக்தமாயிற்று. உத்தராதி₄கரண சதுஷ்டயத்திலும், பரமாத்மரக்தி ஜநநார்த்த₂ம் ப₄க₃வத் கல்யாணகு₃ணங்கள் ப்ரதிபாதி₃தமாயிற்று.

ஆனல் கல்யாணகு₃ண ப்ரதிபாத₃கமான இப்பாத₃த்தில் நிரூபிக்கவேண்டின தோ₃ஷங்கள் ஸங்க₃தமானபடி எங்ஙனேயென்னில் ; தோ₃ஷகீர்த்தநபரமான இவ்வதி₄கரண சதுஷ்டயமும், பூர்வபாத₃ம்போலே நிஷ்க்ருஷ்டதோ₃ஷ ப்ரதிபாத₃ந பரமன்றிக்கே கல்யாணகு₃ண ப்ரதிபாத₃கமுமாகையாலே, இப்பாத₃த்திலே ஸங்க₃த மாயிற்று; ஆகையாலிறே அதி₄கரண ஸாராவளியிலே—பூர்வபாத₃ம் நிஷ்க்ருஷ்ட தோ₃ஷ ப்ரதிபாத₃ந பரமாகவும், இப்பாத₃ம் கல்யாணகு₃ண ப்ரதிபாத₃நபரமாகவும் 3. "பாதே₃ த்வர்த்த₂ஷ் ஷட₃ஸ்மிந் வபுரிஹ விஜஹத்₃பூ₄தஸூக்ஷ்மைஸ்ஸஹோயாத், பு₄க்தஸ்வர்க₃ாவரோஹோऽப்யநுஶயஸஹிதோ மாத்ரயா பி₄ந்நமார்க₃: | சந்த்₃ர ப்ராப்த் யாதி₃ ந ஸ்யாந்நிரயபத₂ஜுஷாமம்ப₃ராதௌ₃ ஸத்₃ருக்த்வம், தஸ்மாச்சீ₂க்₄ராவரோஹ: பரவபுஷி சிரம் வ்ரீஹிபூர்வேऽபி யோக₃: ||" என்றும் 4. "பாதே₃ ஸ்வப்நார்த்த₂ ஹேதுஸ் தத₃யமிஹ ஸுஷுப்த்யாத்₄ருதிஸ்ஸுப்தகோ₃ப்தா, முக்₃தே₄ பே₃ாத₄ாதி₄கர்த்தா

த்வநக₄ஶா₃ப₄ரு₃ணோऽசித்பி₄ரம்ஶீ ஸதே₃ஹ:। பாரம்யஸ்யைகஸீமா ஸகலப₂லத₃ இத்ய்யுயதே ப₄க்தி!பூ₄ம்நே, ஸத்யே ஹ்யேவம் கு₃ணதா₃வத₂ பரப₄ஜநே ரூபபே₄த₃ாதி₃ சிந்த்யம் ||'' என்றும் இரண்டு ஸ்ரகு₄த₄ரையாலே வேத₃ாந்தாசார்யர் வகுத்து அருளிச்செய்தார்.

இனி, இரண்டாம்பாட்டு பூர்வாதி₄கரண சதுஷ்டய ஸமாநார்த்த₂மாயும், மூன்றும்பாட்டு உத்தராதி₄கரண சதுஷ்டய ஸமாநார்த்த₂மாயுமிருக்கும்; இதில் பூர்வாதி₄கரண சதுஷ்டய நிரூபித வர்த்தமாந தே₃ஹமாத்ராநுப₃த்₃த₄ ஸ்வப்நாத்₃யவஸ்த₂ாऽநுவ்ருத்ததே₃ாஷங்களை—ஆழ்வாரும் ''மின்னின் நிலையில, மன்னுயிராக்கைகள், என்னுமிடத்திறை, உன்னுமின் நீரே''—''மின்னோடொத்த ஸ்வப₄ாவத்தையுமுடையதல்ல-ஆத்மவஸ்து பரிக்₃ரஹிக்கிற ஶரீரங்கள் என்கிறவிடத்தில் நீங்களே அல்பம் சிந்தியுங்கோள்''என்று ஸ்வாப்நகல்ப தடிச்சஞ்சலமாயிருந்துள்ள வர்த்தமாந தே₃ஹதே₃ாஷகீர்த்தநமுகே₂ந ஸூசிப்பித்தருளினர். ஶரீராதி₃பதா₃ர்த்த₂ங்களுக்கும் ஸ்வப்நாத்₃யநுபூ₄தபதா₃ர்த்த₂ங்களுக்கும் ப்₄ரமக்ருத வைலக்ஷண்யமொழிய நிரூபகர்க்கு வைலக்ஷண்யம் தோற்றுதிறே. இன்னமும் ஸ்வாப்ந பதா₃ர்த்த₂ கர்த்ருத்வம் ஜீவனுக்குக் கூடாமைக்கு ஹேது—ஸத்யஸங்கல்பத்வதிரோத₄ாநம்; அதுக்கும் ஹேது — பரமாத்ம நிக்₃ரஹம்; அதுதானும் தே₃ஹத்தோடே ஸம்ப₃ந்தி₄ப்பித்து விட்டுத் திரோத₄ாநத்தைப்பண்ணும்; ஆகையால் ஸ்வாப்ந கர்த்ருத்வம் ஜீவனுக்குக் கூடாதென்கிற ப்ரத₂மாதி₄கரணார்த்த₂ம்-''மன்னுயிராக்கைகள்'' என்று ஸத்யஸங்கல்பத்வ திரோதி₄ஹேதுபூ₄த தே₃ஹ ஸம்ப₃ந்த₄ ப்ரதிபாத₃நத்தாலே விஶேஷித்து ஸூசிதமாயிற்று. சதுர்த்த₂ாதி₄கரணோக்தமான ஸூப்தஸ்யைவ உத்தி₂தத்வ நிரூபணமுகே₂ந நித்யத்வஸாத₄நமும்—''மன்னுயிர்'' என்கிற சந்தைக்கு ''நித்யமான ஆத்மவஸ்து'' என்று வ்யாக்₂யாதாக்கள் ஒருபடி வ்யாக்₂யாநம் பண்ணியிருக்கையாலே இச்சந்தையாலே உக்தமாயிற்று. இவ்வதி₄கரண சதுஷ்டயத்துக்கும் ப₄க₃வந் மஹிம ப்ரதிபாத₃கத்வாகாரமும் உண்டாகையாலே, அவ்வம்ஶத்தையும் நியந்த்ருத்வரூபமஹிமவாசியான ''இறை'' என்கிற பத₃த்தாலே ஸூசிப்பித்தருளினர். முன்புள்ள முதலிகளனைவரும் ''இறையுன்னுமின்'' என்கிற சந்தைக்கு 'அல்பம் விசாரியுங்கோள்' என்று அர்த்த₂மிட்டார்களேயாகிலும், உரையிலே ஜீயர், 'ஸ்வாமியை மநநம் பண்ணுங்கோள்' என்று ஒரு பொருளிடுகையாலே, முன்புள்ள முதலிகளுக்கு அவிருத்₃த₄ார்த்த₂ாந்தரகத₂நம் அபி₄மதமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். இனி, இப்பத₃த்துக்கு ஸ்வாமித்வ நியந்த்ருத்வங்கள் இரண்டும் அர்த்த₂மென்னுமிடம் வ்யுத்பத்திஸித்₃த₄மாகையாலே இப்படியும் ஓரர்த்த₂ம் சொல்லத்தட்டில்லை.

இனி உத்தராதி₄கரண சதுஷ்டயார்த்த₂த்தையும் ''நீர்நுமதென்றிவை, வேர்முதல்மாய்த்திறை, சேர்மினுயிர்க்கதன், நேர்நிறையில்லே''—''நீங்கள் என்றும் உங்களதென்றும் சொல்லுகிற அஹங்கார மமகாரங்களை ஸவாஸநமாகப்போக்கி ஈஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள்; ஆத்மாவுக்கு இத்தோடொத்த அதிஶயமில்லை''என்று

